ஜே. கே. — 60 :

# ஓர் இலக்கியவாதிக்கு அரசியல் விழா!




✱ விழா மேடையில்....

என்ன இது! ஓர் எழுத்தாளரின் பாராட்டு விழாவுக்கு இத்தனை கூட்டமா? என்ன ஆயிற்று நம் தமிழ் மகா ஜனங்களுக்கு? எங்கிருந்து வந்தது இப்படி ஓர் ஆர்வம்? காமராஜர் அரங்கே கலகலத்துப் போகுமளவுக்குக் கூட்டம். என்னதான் காங்கிரஸ் கட்சி நடத்தும் விழா என்றாலும் ரசிகர் பகுதியில் அரசியல் ஆர்வலர்களோடு போட்டி போட்டுக் கொண்டு ஒரு நிஜ இலக்கியவாதியின் நேர்மையான வாசகர்களும் நிறைந்திருந்தார்கள். பலர் இடமில்லாமல் நடைபாதைகளில் தரையில் அமர்ந்தும் பொறுமையாகப் பேச்சுக்களைக் கேட்டார்கள்.

ஜெயகாந்தனுக்கு அறுபது வயதா? அன்று விழாவில் அவரைப் பார்த்தவர்கள் யாரும் சத்தியம் பண்ணினாலும் நம்ப மாட்டார்கள். மாறாத அதே கட்டுடம்பும், முறுக்கிய மீசையும், தொள்ளம் வரை தவழும் கிருதாவும் வேளைக்கொரு டிரெஸ்ஸும், அதே, அதே ராஜ நடையும், கர்ஜிப்பும்... அவர் மார்க்கண்டேய வம்சம்.

காலை ஒன்பதிலிருந்து இரவு ஒன்பது வரை என்று அழைப்பிதழ் சொன்னாலும், விழா முடிய பத்து, பத்தரைக்கு மேலாகி விட்டது. அவ்வளவு நேரம் என்ன பேசினார்கள்?

'தமிழ் இலக்கியத்தில் ஜெயகாந்தன், தேசிய இயக்கத்தில் ஜெயகாந்தன்' என்று காலையும் பிற்பகலும் கருத்தரங்கம். மாலை மூப்பனார் தலைமையில் பாராட்டு விழா.

நிர்வாகிகளுக்கு ஒரு வார்த்தை. உங்கள் உற்சாகத்துக்கும் உழைப்புக்கும் பாராட்டுக்கள். ஆனால் ஒரு சகாப்தத்தின் சரித்திரத்தைச் சாறு பிழிந்து காட்டத் தகுதியான நபர்களைப் பொறுக்கிப் போட வேண்டாமா?

சும்மா அவரது ஓரிரு கதைகளை ஒப்பித்துவிட்டு, 'இவர் தமிழ் எழுத்தாளர் மட்டுமல்ல; இந்திய அரங்கில் - ஏன் உலக அரங்கில் வைத்துப் பேசப்படக் கூடியவர்' என்று தொண்டை கிழியக் கத்திப் போகும் இப்படியான சாதா தோசை பேச்சாளர்களை எங்கிருந்து பிடித்தீர்கள்? 'தமிழிலக்கியத்தில் ஜெயகாந்தன்' என்கிற மிகப் பெரிய

கிரௌண்ட் கிடைத்திருக்க - எத்தனை விதமாக, எப்படியெல்லாம் அலசியிருக்கலாம்?

அதுவே தேவலை என்று நினைக்கும்படியாக அமைந்தது பிற்பகல் நடைபெற்ற அரசியல் அரங்கு. சட்டசபையில் மைக் கிடைக்காத ஆதங்கத்தில், அவரவர்கள் பேசிப் பேசிப் பேசித் தீர்த்து விட்டார்கள். ஜெயகாந்தனை டீலில் விட்டு விட்டு, ஜெயலலிதாவைப் பிடித்து உலுக்கு உலுக்கென்று உலுக்கித் தீர்த்து விட்டார்கள். அவ்வப்போது சில நாலாந்தர, கொச்சை விமர்சனங்கள் வேறு!

ஒரு கட்டத்தில் இது ஜெயகாந்தன் மணிவிழாவா, ஜெயலலிதா கண்டனக் கூட்டமா என்று எழுந்த எண்ணம் தவிர்க்கும்படியில்லை.

மாலை அமர்வில் ஒரு மணியான பேச்சும் கேட்கக் கிடைத்தது. புண்ணியம் கட்டிக் கொண்டவர் பாலுமகேந்திரா.

''கட்டற்ற கற்பனைக் குதிரையைத் தட்டிவிட்டு, மாட மாளிகைகளையும் மலர் வனங்களையும் புகை மண்டலத்துக்கு நடுவே காட்டி, தமிழ் சினிமா ஜீவித்திருந்த காலத்தில், ஒரு புயலைப் போல் வந்து, தமது 'உன்னைப் போல் ஒருவன்' படம் மூலம் இந்நாட்டுத் தலைவிதியின் ஆதார சுருதியைப் பிடித்து, உயர்த்திக் காட்டியவர் ஜெயகாந்தன்'' என்று தொடங்கி, பாலுமகேந்திரா பேசியதில் வார்த்தைக்கு வார்த்தை பொருள் நயம் மிகுந்து இருந்தது. சப்ஜெக்டை விட்டு நகராமல் நங்கூரம் பாய்ச்சி நின்றார்.

ஜெயகாந்தன் ரசிகர்களுக்கு ஒரு ஸ்வீட் நியூஸ். அவரைப் பற்றி எழுத்தாளர்களின் ஒத்துழைப்புடன் தாமே சொந்தமாக ஒரு டாகுமெண்டரி தயாரிக்க இருப்பதாகத் தொலைக்காட்சி இயக்குனர் நடராஜன் தெரிவித்தபோது, ஆரவாரமான வரவேற்பு இருந்தது.

தயாரிப்பது தொ.கா. அல்ல; அதன் இயக்குனர்தான் என்பதால் கூடிய விரைவில் தயாரிக்கப்பட்டுவிடும் என்று நிச்சயம் நம்பலாம்.

*(பி.கு:) அழைப்பிதழில் வாழப்பாடி பெயர் இருந்தது. ஏதடா, அக்னி நட்சத்திரங்கள் இரண்டுமே அருகருகே அமரப் போகிறதோ என்று ஹார்ட் பீட் எகிறக் காத்திருக்க.... ஹூம்.. ஏதோ 'தவிர்க்க முடியாத அலுவல்...' என்கிற வழக்கமான பல்லவி பாடி, வாழப்பாடி ஆப்ஸெண்ட், மூப்பனார் மட்டும்தான் பிரசெண்ட். மழைவிட்டாலும் தூவானம் விடாதென்பது நமது பழமொழி.)*

- பா.ராகவன்

படம் : ராமமூர்த்தி





ஏழுமலை

# ஏழுமலை கொலை: ஏன் வேண்டும் சி.பி.ஐ. விசாரணை?

சமீபத்தில் கொலை செய்யப்பட்ட வை.கோ. அணிப் பிரமுகர் ஏழுமலை நாயக்கரின் பின்னணி என்ன?

அந்தக் காலத்தில் சென்னையில் ரோஷமான குத்துச் சண்டைப் போட்டிகள் நடக்கும். அப்போது அடிபடும் சொற்றொடர், இடியப்ப நாயக்கர் பரம்பரை. சார்பட்டா பரம்பரை. இதில் இடியப்ப நாயக்கரின் பரம்பரயைச் சேர்ந்தவர்தான் இவர்.

ராயபுரத்தில் பாக்லர்கள் அதிகம். அதனால் கலாட்டா, மோதல்களும் அதிகம். அந்தச் சூழ்நிலையிலேயே வளர்ந்து 'தாதா' வாகி விட்டவர் ஏழுமலை. சட்டவிரோத காரியங்கள் மூலம் சம்பாதித்து, அதை, வியாபாரம், தொழிலில் முதலீடு செய்து, லட்சக் கணக்கில் செல்வம் பெருக்கியவர். இவர் முதலில் செய்த தொழில், பாக்டரிகளுக்குத் தகடுகளால் ஆன டிரே செய்து கொடுப்பதுதான்.

தி.மு.க.வில் பொன்னுரங்கம் என்ற ஒரு எம்.எல்.ஏ. இருந்தார். அவருடைய ஆதரவாளராகவே செயல்பட்டு, ராயபுரம் பகுதி தி.மு.க. செயலாளராக இருந்திருக்கிறார். துறைமுகத்தில் செல்வாக்கு அதிகம். அங்கு பணியாற்றிய தொழிலாளர்களைத் தம் கட்டுப்பாட்டில் வைத்திருந்தவர். கன்டைனர்களை ஏற்றிச் செல்லும் டிரக்குகளுக்குச் சொந்தக்காரர். ராஜீவ் காந்தி இறந்த சமயம் ஊரெங்கும் தி.மு.க. கொடிகள் வெட்டப்பட்டபோது, ராயபுரம் பகுதியில் மட்டும், ஒன்றும் செய்ய முடியவில்லை. காரணம்: ஏழுமலை!

கழக கட்சித் தேர்தலில், வடசென்னை மாவட்டச் செயலாளராக வர விரும்பினார். ஆனால் ஸ்டாலின் விருப்பம் வேறு விதமாக இருந்ததால், தோற்கடிக்கப்பட்டார். கரைவேட்டி கட்டாத கழகத் தோழர். ஊர்வலம், பொதுக் கூட்டம் போன்றவற்றுக்கு அடிப்படையான ஏற்பாடுகளைச் செய்தாலும் நிகழ்ச்சிகள் நடக்கும் போது முன்னணியில் நிற்க மாட்டார். இதனாலேயே இவர் இறந்த போது, பத்திரிகைகள் புகைப்படம் கிடைக்காமல் திண்டாடின. தம்முடைய ரவுடி இமேஜை தூக்கியெறிந்து விட்டு, ஒரு கண்ணியமான அரசியல்வாதியாக உருவாவதற்கு முயற்சி செய்யும் நிலையில் கொலை செய்யப்பட்டு விட்டார்.

இந்தக் கொலை தொடர்பாக சி.பி.ஐ. விசாரணை வேண்டும் என்ற கோரிக்கையை ஜெயலலிதா நிராகரித்தாலும், அந்தப் பகுதி மக்களிடம் பேசும்போது காட்டப்படும் கோணங்கள், இது போன்ற விசாரணை தேவை என்பதையே வலியுறுத்தின:

- ராயபுரம் பகுதியில் ஏழுமலை பெற்றுள்ள ஆதரவு, ஆளும் கட்சிப் பிரமுகர்களுக்கு எரிச்சலை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. கொஞ்ச காலம் முன்பு அவரது ஊழியர் போலீஸ் நிலையத்தில் இறந்தபோது, ராயபுரமே ஸ்தம்பித்துப் போனது. 'உங்க' ஏரியாவில் உங்களுக்குச் செல்வாக்கு இவ்வளவுதானா?' என்று ஆளும் கட்சிப் பிரமுகர்கள் மேலிடத்தில் இகழப்பட்டார்கள்!
- கொலை நடந்த இடத்தில் இருந்த விசிட்டிங் கார்டுகள் அமைச்சர் ஒருவருக்கு வேண்டிய கழகப் பிரமுகருடையது என்று சொல்லப்படுகிறது.
- பல விஷயங்களில் ஏழுமலை பஞ்சாயத்துச் செய்து வந்ததால், போலீஸாரின் மாமூல் வாழ்க்கை பாதிக்கப்பட்டது. அவர்கள் எரிச்சலில் இருந்தனர்.
- வளர்ந்து வரும் தொழிலதிபர் ஒருவருடன் துறைமுக வளாகச் செயல்பாடுகளில் ஏழுமலைக்கு மோதல் ஏற்பட்டதாம். அந்தத் தொழிலதிபருக்கு ஏழுமலை ஒரு சவாலாக இருந்தாராம்.
- ஆளும் கட்சியைச் சேர்ந்த சாராய வியாபாரிகளுடன் தொடர்ந்து மோதல் இருந்து வந்திருக்கிறது.
- சட்டமன்றத்தில் சொன்னது போல, பெரிய பேரணி நடத்திக் காட்டியதால், கலைஞரின் உடன் பிறப்புகளின் எரிச்சலுக்குள்ளானார்.
- கடைசியாகக் கைதாகியுள்ள ஆறு பேரில் நால்வர் அ.தி.மு.க. ஆதரவாளர்கள் என்றும் அவர்களைக் கைது செய்ததற்கு உள்நோக்கம் உண்டு என்றும் பேசப்படுகிறது.

"ஊரில் எந்தச் சாவு நடந்தாலும் தி.மு.க. மீது பழிபோடுவது வாடிக்கையாகி விட்டது. தராக ஊழியர்கள் கொலை வழக்கு, சந்திரலேகா ஆஸிட் வழக்கு ஆகிய வழக்குகளின் விசாரணை வேகத்தைப் பார்க்கும்போது, இந்த அரசின் விசாரணையில் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. ஆகவே சி.பி.ஐ. விசாரணை கேட்கிறோம்" என்கிறார் பரிதி இளம் வழுதி. "தேவையில்லை போலீஸ் விசாரணையைச் சந்தியுங்கள்" என்ற ஜெயலலிதாவின் போக்கு நீதியை நிலை நாட்டுமா? சந்தேகம் தான்.

– தில்லப்பா

# காட்டுமிராண்டி கோஷ்டி பூசல்!

தமிழ்நாடு காங்கிரஸில் கோஷ்டிப்பூசல் உண்டு என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் அது இப்படி காட்டுமிராண்டித்தனமாக மாறும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. கருத்துக் கணிப்புக்காக டில்லியிலிருந்து அனுப்பப்பட்டு வந்திருந்த ஜனார்த்தன் பூஜாரி, சத்தியமூர்த்தி பவனில் கட்சிக்காரர்களுடன் பேசிக் கொண்டிருக்கும்போதே வெளியே சாலையில் மினி யுத்தமே நடந்திருக்கிறது.

''தங்கபாலு படம் போட்ட வேன்களுடன் அவர் கோஷ்டி ஆட்கள் பல மாவட்டங்களிலிருந்தும் வந்திருந்தனர். அவர்கள் வந்த வேன்கள் உள்ளே நுழையும்போது 'காட்டிக் கொடுத்த துரோகி தங்கபாலு ஒழிக!' என்று கோஷம் போட்டவாறே வாடகைக்கு அழைக்கப்பட்டிருந்த அடியாட்கள், வேன் கண்ணாடிகளை அடித்து நொறுக்கினர். தொண்டர்களை உருட்டுக் கட்டைகளால் தாக்கினார்கள்'' என்று நம்மிடம் சொன்னார் மூப்பனார் அணியைச் சேர்ந்த இடைநிலைத் தலைவர் ஒருவர்.

''நாங்கள் இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. மிக நன்றாகத் திட்டமிட்டு, எங்களைச் சத்தியமூர்த்தி பவனுக்குள் விடாமல் தடுத்துவிட்டனர். பூஜாரியிடம் நாங்கள் 'வேறு இடத்தில் வந்து சந்திக்கிறோம்' என்று ஏற்கெனவே கூறியிருந்தோம். ஆனால் அவர் கேட்கவில்லை'' என்கிறார் தங்கபாலு ஆதரவாளரான பூநூர் வேணுகோபால்.

வாழப்பாடி ஆதரவாளர்களோ, ''தங்கபாலு வாழ்க!' என்று கோஷம் போட்டிருந்தால் கலாட்டா நடந்திருக்காது. 'வாழப்பாடி ஒழிக!' என்ற கோஷம் போட்டதால்தான் கலாட்டா வந்தது'' என்கிறார்கள்.

அ.தி.மு.க. ஆட்சி, இதோ கவிழப் போகிறது' என்று பல மாதங்களாக அடிபட்ட வதந்தி போல, 'வாழப்பாடிக்குப் பதிலாக வேறு தலைவரை நியமிக்கப் போகிறார்கள்' என்ற செய்தியும் பல மாதங்களாகவே அடிபட்டுக் கொண்டிருக்கிறது. கடந்த ஐந்து வருட காலமாகத் தம்மை நன்றாக ஸ்திரப்படுத்திக் கொண்டிருந்த வாழப்பாடியைத் தூக்குவதற்குப் பிரதமர் தயங்கினார் என்பதுதான் உண்மை. கைதேர்ந்த அரசியல்வாதியான வாழப்பாடியார் ஒரு கட்டம் வரை அ.இ.அ.தி.மு.க.வுடன் கைகுலுக்கிக் கொண்டு, தம் பதவியைக் காப்பாற்றிக் கொண்டார். பின்னர், மூப்பனாருடன் சமரசம் செய்து கொண்டார். தமிழ்நாடு காங்கிரஸில் ஐந்து வருடங்கள் தொடர்ந்து



* குமரி அனந்தன்



* தனுஷ்கோடி ஆதித்தன்



* அருணாசலம்

— அடுத்த தமிழ

தலைவராக இருந்து சாதனை படைத்திருக்கிறார். இவ்வளவு நீண்ட காலம் இப்பதவியில் 1969 க்குப் பிறகு வேறு யாருமே இருந்ததில்லை.

''இப்போது தமிழக அரசியல் இருக்கும் நிலையில் வாழப்பாடியாரே தலைவராக நீடிப்பதுதான் காங்கிரஸுக்கு நல்லது. கடந்த ஐந்து வருடங்களில் ஒரு மக்கள் தலைவராக உயர்ந்திருக்கிறார் அவர். பல மாநிலங்களில், சட்டமன்றத் தேர்தல்களில் கட்சி நன்கு செயலாற்ற வேண்டி நிர்வாகிகளை மாற்றி அமைக்கப் பிரதமர் நினைக்கிறார். ஆனால் அந்த நிலை தமிழகத்திற்குப் பொருந்தாது. இங்கு சட்டமன்றத் தேர்தல் எதுவும் நடக்கப் போவதில்லை. பதவியை விட்டுப் போகப் போவதால் வாழப்பாடியாருக்கு எதுவும் நஷ்டமில்லை; தமிழகத்துக்கும் காங்கிரஸுக்கும்தான் பலவீனம்'' என்கிறார் காங்கிரஸின் செய்தித் தொடர்பாளரான வெள்ளிவளவன்.

உட்கட்சித் தேர்தல்களைக் வெள்ளிவளவன் ஆட்சேபிக்கவில்லை; வரவேற்கிறார். ''அகில இந்திய காங்கிரஸ் விதிகளின்படி இரண்டு வருடங்களுக்கொருமுறை உட்கட்சித் தேர்தல் நடத்தப்பட வேண்டும். இந்தக் கால இடைவெளியை நீடிக்கவோ, குறைக்கவோ அந்தச் சட்டத்தில் இடமில்லை. ஆனால், கட்சி விதிகளின்படி நடத்தப்பட்டால்தானே!'' என்று வேதனையுடன் கேட்கிறார் அவர்.

தமிழ்நாட்டில் கோஷ்டித் தகராறுகள் காரணமாகத்தான் காங்கிரஸ் வளரவில்லை என்பது கண்கூடு. 'இதற்கு ஒரு முடிவே இல்லையா?' என்றால், ''கோஷ்டிகளை உருவாக்கத் தெரியாதவரைத் தலைவராகவே மதிக்க மாட்டார்கள் தெரியுமா?'' என்று ஜோக்கடிக்கிறார் க. கப்பு.

''1969 க்குப் பிறகுதான் இந்தத் தலைவலி. அதற்கு முன்பு கோஷ்டிகள் இருந்தாலும், கட்சி வளர்ச்சியே பிரதான நோக்கமாக இருந்தது. என்றைக்கு நியமனத் தலைவர்களைப் போட ஆரம்பித்தார்களோ அன்றே கோஷ்டிகள் உருவாகத் துவங்கிவிட்டன. கட்சித் தேர்தல்கள் முறைப்படி நடத்தப்பட்டால் இந்தப் பிரச்னைகளே இருக்காது!'' என்கிறார் கப்பு.

கட்சித் தேர்தல்கள் ஒரு கட்டத்தில் நடந்துவிடுமோ என்று தமிழக காங்கிரஸே பரபரப்பாக இருந்தது. தொண்டர்களும் தலைவர்களும், கையில் உறுப்பினர் புத்தகங்களும், வசூலான பணமுமாக அலைந்தனர். உறுப்பினர் கட்டணம் லட்சக்கணக்கில் வசூலிக்கப்பட்டு வங்கியில் போடப்பட்டதோடு சரி. தேர்தலும் நடக்கவில்லை; ஆட்களும் மாறவில்லை.

''அ. இ. அ. தி. மு. க. ஆட்களைப் போலி உறுப்பினர்களாகச் சேர்த்திருக்கிறார்கள் வாழப்பாடி ஆட்கள்!'' என்று மூப்பனார் அணியினர் கொஞ்ச காலம் முட்டுக்கட்டை போட்டுக் கொண்டிருந்தனர். பின்னர் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு மோதிலால் வோரா பலமுறை வந்தார்; ஒன்றும் நடக்கவில்லை. 'விட்டால் போதும்' என்று கவர்னராகப் போய்விட்டார் அவர்.

''காங்கிரஸ் எவ்வளவு பெரிய கட்சி! ஆனால் அதில் உட்கட்சி ஜனநாயகம் என்பது கொஞ்சித்தும் கிடையாது. கட்சியில் முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட காரியக் கமிட்டி இருக்கிறது. ஆனால் அங்கே விவாதிக்கப்பட்டு முடிவுகள் எடுக்கப்படுவதில்லை. ''தலைவரே பார்த்துத் தீர்மானிக்கட்டும்'' என்று தங்கள் உரிமைகளைத் தாரை வார்த்துக் கொடுத்திருக்கிறார்கள் அதன் உறுப்பினர்கள். முதல்வர் தேர்வாகட்டும், மாநிலத் தலைவர் நியமனம் ஆகட்



● பாண்டிச்சேரியிலிருந்து தங்கபாலு ஆதரவு ஆட்கள் வந்த வேன் கண்ணாடி நொறுங்கிக் காட்சியளிக்கிறது. (படம் : ராஜன்)





● ப. சிதம்பரம்



# காங்கிரஸ் தலைவர் யார்?

# “வாழப்பாடியும் ஜெயா காங்கிரஸாக இருந்தவர்தானே!”

— சாடுகிறார் சிங்காரம்!



“ஜெயா காங்கிரஸ்” என்று மற்ற காங்கிரஸ்காரர்களால் வர்ணிக்கப்படுபவர்களில் குறிப்பிடத் தக்கவர் பேராவூரணி சட்டமன்ற உறுப்பினர் சிங்காரம். ஒரு காலத்தில் இவருக்கு நெல்லை அல்வாவாக இனித்த வாழப்பாடியார், இன்று குண்டூர் மிளகாய்! பலமாக காங்கிரஸ் கோஷ்டிகள் ஜெ.வை எதிர்ப்பதில் மட்டுமாவது ஒன்றுபட்டு வரும் இந்த நேரத்தில், முதல்வருடன் நெருங்கிய தொடர்புடையவர் என்று விமர்சிக்கப்படுபவர். அவருடன் ஒரு சந்திப்பு:

“உங்களையும், மற்றும் சில காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களையும், ஜெயா காங்கிரஸ் என்று கிண்டல் செய்கிறார்களே!”

“தேசிய அளவில், குமரியிலிருந்து காஷ்மீர் வரை உள்ள ஒரே கட்சி காங்கிரஸ்தான். காங்கிரஸ் மத்தியில் ஆட்சியில் இருந்தால்தான் நாட்டுக்கு நல்லது. ஆனால் தமிழ்நாட்டில், காங்கிரஸ் தனித்துப் போட்டியிட்டு, நாடாளுமன்றத்துக்குப் பெரும்பாலான இடங்களைப் பிடிக்கக் கூடிய நிலையில் இல்லை. ஆகவே, எந்தக் கட்சியுடன் கூட்டு வைத்துக் கொண்டு, அதிக இடங்களைப் பிடிக்க முடியும் என்று பார்த்தால், அ.இ.தி.மு.க. ஒன்றுதான் பரிசீலனைக்கே வருகிறது. அவர்களுக்குத் தேசியப் பார்வை உண்டு. மேலும் மற்ற எதிர்க் கட்சிகளெல்லாம் இரண்டிரண்டாய்ப் போய் விட்டன. தம்முடைய சொந்த ஆதாயத்துக்காக முதல்வருடன் நெருங்கிய தொடர்பு வைத்திருந்த வாழப்பாடியார், இப்போது கண்மூடித்தனமாய் எதிர்க்கத் தொடங்கி விட்டார். சென்ற சட்டமன்றத் தேர்தலில், ராஜீவ் கொலைக்குக் காரணம் தி.மு.க.வும், பா.ம.க.வும்தான் என்று பிரசாரத்தை ஆரம்பித்து வைத்தவரே வாழப்பாடியார்தான். ஆனால்

டும். தலைவரே பார்த்துத் தீர்மானிப்பதுதான். இந்த நிலையில் மனக்கசப்பு வளர்வதையும் கோஷ்டிப் பூசல்கள் உருவாவதையும் எப்படித் தவிர்க்க முடியும்?” என்று வேதனையோடு விமர்சிக்கிறார் நடுநிலையாளரான மூத்த காங்கிரஸ் தலைவர் ஒருவர்.

ஒரு மாநிலக் கட்சியுடன் கூட்டணி என்ற விஷயத்தை அடிப்படையாகக் கொண்டு, ஓர் அகில இந்திய கட்சி அதன் மாநிலத் தலைவரைத் தீர்மானிக்கும் அதிசயம் தமிழ்நாட்டில் மட்டும்தான் நடக்கும்.

“தங்கபாலு வந்தால் மத்திய அரசைக் கடுமையாக எதிர்த்து நிற்கும் ஜெ. யுடன் உறவு வைத்துக் கொள்வார். இங்கே மக்கள் ‘மூடே’ மாறி இருக்கிறது. அ.தி.மு.க. அரசின் ஊழலாட்சியை மக்கள் கடுமையாக விமர்சிக்கிறார்கள்; எதிர்க்கிறார்கள். இந்த நிலையில் கட்சி, அ. தி. மு. க. வுடன் தொடர்பே வைத்துக் கொள்ளக் கூடாது!” என்று வாழப்பாடியார் ஆட்கள் சொல்கிறார்கள். இந்தக் குற்றச்சாட்டைக் கேட்டு விலா நோகச் சிரிக்கிறார் தங்கபாலு ஆதரவாளரும் சட்டமன்ற உறுப்பினருமாகிய போளூர் வரதன்.

“அ.தி.மு.க.வுடன் நேற்றுவரை குலாவியவர்கள்தானே அவர்கள்? அப்போதெல்லாம் இனித்ததா? தலைவர் நரசிம்மராவ் என்ன சொல்கிறாரோ அதுதான் தங்கபாலுவுக்கு வேதவாக்கு. வாழப்பாடியாரைப் போன்று தலைமைக்குக் கட்டுப்படாமல், தான்தோன்றியாக அவர் செயல்பட மாட்டார். எந்தச் சமயத்தில் என்ன முடிவு எடுப்பது என்று பிரதமருக்குத் தெரியும். அதைச் செயல்படுத்துவதுதான் எங்கள் வேலை” என்கிறார் வரதன்.

நரசிம்மராவின் தெளிவான வழிகாட்டுதல் இல்லாததால் கோஷ்டிகளிடையே இடைவெளி அதிகமாவதற்கும் பூசல்களுக்கும் காரணம் என்றும் பல காங்கிரஸ்காரர்கள் சொல்கிறார்கள்.

“இங்கே உள்ள பல கட்சிகளைத் தம்மிடம் உள்ள பணத்தைக் கொண்டு இரண்டிரண்டாய்ச் செய்து வைத்திருக்கிறார், ஜெயலலிதா. காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களையே ‘வாங்கிப்’ போட்டு இருக்கிறார். இல்லையென்றால் அவர்கள் சட்டமன்றத் தலைவர் எஸ். ஆர். பி. சொல்லியும் அவைக்குச் செல்வார்களா? அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கச் சொன்னால் காலம் தாழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலை உணர்த்துவது என்னவென்றால், மாநிலங்களில் கட்சி எப்படிச் செயல்பட்டாலும், அவமானப்பட்டாலும் பரவாயில்லை; மத்தியில் காங்கிரஸ் ஆட்சி தொடர்ந்தால்

இன்று அவர்களோடு இணைந்து செயல் படத் துடிக்கிறார்! இடைத்தேர்தல்களில் பொது வேட்பாளர் போடலாம் என்று அவர் களுக்குத் தூது விடுகிறார். இதைக் கண்டித் தால் எங்களை 'ஜெயா காங்கிரஸ்' என்று கிண்டல் செய்கிறார். நாங்கள் ஜெயா காங் கிரஸ்தான் என்று வாதத்திற்காக வைத்துக் கொண்டாலும், இவரும் நேற்றுவரை அப்படி இருந்தவர்தானே!''

''அ.இ.அ.தி.மு.க. ஆட்சியின் ஊழல், அதிகார துஷ்பிரயோகங்களைப் பொறுக்கா மல்தான் இப்போது காங்கிரஸ் அதனை எதிர்க்கிறது. ஆனால் நீங்கள் ஊழல் ஆட்சியை விமர்சிப்பதில்லை...''

''எல்லா இடங்களிலும் நடப்பது போன்று இங்கேயும் ஊழல், அதிகார துஷ் பிரயோகம் உண்டு. ஆனால் சென்ற தேர்த லில் இணைந்து போட்டியிட்டு வெற்றி பெற்றவர்கள் நாங்கள். அப்படியிருக்க, அரசைப்பற்றிய விமர்சனங்கள், ஊழல் புகார்கள் போன்றவற்றை முதல்வரின் கவ னத்துக்கு நேரடியாகக் கொண்டு போய் முடிவு காண வேண்டுமென்பது என் கருத்து. என் அளவில் என் தொகுதியின் பிரச்னை களைத் தீர்த்து வைக்க நடவடிக்கைகள் எடுக் கிறேன். சட்டமன்றத்தில் கிட்டத்தட்ட 12000 கேள்விகள் கேட்டிருக்கிறேன். என் சொந்த லாபத்துக்காக எந்தச் சலுகையையும் இந்த அரசிடமிருந்து பெறவில்லை. ஆனால் வாழப்பாடியார் பற்றி இப்படிச் சொல்ல முடியுமா?''

''உங்கள் மகள் கல்யாணத்திற்கு வந்த முதல்வர் தங்கச் செயின் பரிசளித்தது குறித்து...!''

''என் மகள் கல்யாணத்துக்கு 'மொய்' யாக வந்தது அது. முதல்வர் வீட்டில் ஏதா வது விசேஷம் நடந்து அழைப்பு வந்தால் அதைத் திருப்பிச் செய்துவிடப் போகிறேன். இதைப் போய் ஒரு பிரச்சனையாகப் பேசு கிறார்களே!''

''சமீப காலங்களில், மத்திய அரசுக்கு எதிராகச் செயல்படத் துவங்கியிருக்கிறார் முதல்வர். இதுதவிர, புலிகளுடன், மத்திய அரசு தொடர்பு, சாலைக் கொள்ளைகளுக்கு டெல்லி சூழ்ச்சி என்றெல்லாம் பேசி வரு கிறார். இந்த நிலையில் மீண்டும் அ.தி.மு.க. வுடன் காங்கிரஸ் கூட்டு வருமா?''

''அரசியலில் எது நடக்கும் என்று சொல்ல முடியாது. கல்லா சொல்லட்டும்; சுப்பிரமணியசாமி சொல்லட்டும், எதைப் பற்றியும் கவலையில்லை. எங்கள் தலைவர் நரசிம்மராவ் இதைப் பற்றி ஒன்றும் சொல் லவில்லையே! இங்கே, பலர் தங்களது சொந்த விருப்பு-வெறுப்பு ஆதாயங்களுக் காக ஜெயலலிதாவை எதிர்க்கும் நிலையில், பிரதமரின் முடிவுதான் பிரச்னையைத் தீர்த்து வைக்கும். அதுதான் எங்களைக் கட்டுப் படுத்தும்.

பேட்டி: ஆர். எஸ்.

போதும் என்ற மனோபாவத்துடன் தலைமை செயல்படுவதுதான்!'' என்று வருத்தத்துடன் சொன்னார் மூத்த தலைவர் ஒருவர்.

இந்தச் சூழ்நிலையில் அடுத்த தமிழ் நாடு காங்கிரஸ் தலைவராக யார் வருவார் கள் என்று ஏகப்பட்ட ஊகங்கள். சத்திய மூர்த்தி பவன் கலாட்டா நடப்பதற்கு முன்பு வரை, 'தங்கபாலு'தான் என்று முடிவு செய்யப்பட்டிருந்ததாம். இப்போது முடிவு மாறிவிட்டதாகத் தெரிகிறது.

மூப்பனார் அணியில் குமரி அனந்தன், அருணாசலம், தனுஷ்கோடி ஆதித்தன் என்றெல்லாம் பெயர்கள் அடிபடுகின்றன. தனுஷ்கோடி ஆதித்தன் இளைஞர். அவ ருக்கு எதிர்காலத்தில் வாய்ப்புக் கிடைக் கும். அதனால் பரிசீலிக்க மாட்டார்களாம். அருணாசலம், 'நான் மந்திரியாகவே இருந்து கொள்கிறேன்' என்று சொல்லி விட்டாராம்.

ஆக, குமரி அனந்தன்தான் பாக்கி. மூப்பனார் பலமாகச் சிபாரிசு செய்ய வேண் டும். ஆனால் பொதுவாக மூப்பனார் தம்பி டம் பிரதமர் அபிப்பிராயம் கேட்டால் மட்டுமே சொல்லக் கூடியவர். ஆகையால் என்ன ஆகும் என்று சொல்ல முடியாது!

சிதம்பரத்தை நியமித்தால் மேல்தட்டு அரசியல் செய்வார் என்றும் அதனால் சான்ஸ் இல்லையென்றும் சொல்கிறார்கள். இடையில் வைஜயந்திமாலாவும் தலையை நீட்டிப் பார்க்கிறார். அன்பரசுவும் 'நானும் இருக்கிறேன்' என்பதைக் காட்டிக் கொண் டிருக்கிறார்.

இதற்கிடையில், வாழப்பாடி கோஷ்டி யைச் சேர்ந்தவர்கள், சத்தியமூர்த்தி பவனை விட்டு காலி செய்யத் தயாராகி வருகிறார் கள். கணக்குகள் சரிபார்க்கப்படுகின்றன. தம்முடைய 'இன்னிங்ஸ்' பற்றி மிகவும் திருப்தியாகவே இருக்கிறாராம் வாழப் பாடி. ''யாரை வேண்டுமானாலும் தலைவ ராக நியமித்துக் கொள்ளட்டும்!'' என்று சொல்கிறாராம்.

பொது ஜனத்தின் கேள்வியெல்லாம் எந்தத் தலைவர் வந்தாலும், தமிழ்நாட்டில் காங்கிரஸை, சுயமரியாதையோடு, செல் வாக்கு பெறும்படி வளர்ப்பாரா? என்பது தான்!

– ப்ரியன்

அட்டை வண்ணப்படங்கள் -

தங்கபாலு : ராஜன்

வாழப்பாடி : டி. ராமமூர்த்தி

கார்ட்டூன் : மதிகுமார்

# நங்கையரே நடத்தும் நாடகக்குழு!

பம்பாயிலிருந்து, நாலு நாடகங்களுடன் சென்னையில் வந்து இறங்கி, ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியது மகாலட்சுமி லேடீஸ் டிராமா குரூப். ஆண்வேஷம் போடுபவர்கள் உட்பட எல்லாருமே குடும்பத் தலைவிகள் என்பது இருக்கட்டும். மிஸஸ் ஞானம் பாலசுப்பிரமணியன் கதை, வசனம் எழுதி, டைரக்டும் பண்ணி, நடித்தும் இருக்கிறார்!

''பிலிம் டிவிஷனுக்காக ஐல், வரதட்சணை 'தீமை' வைத்து எழுதித் தரச் சொன்னார்கள். நம்மாலும் எழுத முடியும் என்ற நம்பிக்கை அப்போதுதான் வந்தது. அப்புறம் அதையே நாடக மேடைக்குத் தகுந்த மாதிரி மாற்றி எழுதினேன்!'' என்றார் ஞானம்.

முப்பது தடவைக்கு மேல் ரிகர்சல் பார்த்து விடுவதால், வசனத்தில் பெரிய குளறுபடி எதுவும் வந்ததில்லையாம். மூன்று வருடங்களுக்கு முன்னால் கூடச் சென்னையில் சில நாடகங்கள் நடத்தியிருக்கிறது இந்த லேடீஸ் குரூப்.

'அக்கரைப் பச்சை', அசாத்திய அமெரிக்க மோகம் கொண்டு, அங்கேயே பெண்ணுக்குப் பிள்ளை தேடும் அம்மாவின் காரக்டரைச் சித்திரிக்கிறது. நடிப்பு ஓரேடியாக ஓகோ ரகம் இல்லைதான்; ஆனால் அநாவசியங்களும் இல்லை. அதே போல, 'இப்ப நீ என்ன பண்றே...' போன்ற நம்மூர் சபா நாடக டயலாகும் இல்லை.

கல்யாணத்துக்கப்புறம், தங்கள் பிள்ளைகளை, தங்கள் நாட்டுப் பெண்களின் கணவன்களாக மட்டுமே பார்க்கும் அம்மாக்களின் எண்ணோட்டத்தை, 'பாசத்தின் பரிமாணம்' சொல்கிறது.

'பெண்கள் ரெண்டால்', 'சிந்திக்க வைத்த சீதனம்'- இரண்டுமே பாதிக் கதையைச் சொல்லிவிடும் தலைப்புகள். ஸோ, விளக்கம் வேண்டாம்.

''அடுத்தது கல்கத்தா போகிறோம். ஐந்து நாள் தொடர்ந்து ஷோ இருக்கிறது!'' என்றார் ஞானம்.

சென்னை சபா நாடகங்களுக்கு ஒரு 'மெரீனா' மாதிரி, பம்பாயில் ஒரு ஞானம். குடும்பத்தில் பிரச்னைகளுக்கு மூல காரணம் பெண்கள்தாம் என்று பெண்களே சொல்லும்போது, பார்க்க வருகிற ஆடியன்ஸ் மாமிகள் அதை ரைட் ஸ்பிரிட்டில் எடுத்துக் கொள்ள வாய்ப்புகள் அதிகம்.

''இந்த மாமிதான் மீனாம்பாள். என் தமக்கைதான். 'அக்கரைப் பச்சை'யில் பிள்ளை சுந்தரின் அம்மாவாக நடிக்கிறார்!'' என்றார் ஞானம், ஒரு புதிய பெண்மணியை அறிமுகப்படுத்தி.

வயது எழுபத்து மூணாம்!

- சித்தார்த்



● பாசத்தின் பரிமாணம் நாடகத்தில்...

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

'சோ' எழுதிய

1. எங்கே பிராமணன்? ரூ. 60.00
2. வந்தேமாதரம் (நாவல்) ரூ. 48.00
3. துக்ளக் - கேள்வி பதில் - ரூ. 15.00
(முதல் மூன்று ஆண்டுகளில் 'துக்ளக்' இதழில் வெளிவந்த நகைச்சுவை மிக்க - பதில்கள்)
4. காமராஜைச் சந்தித்தேன் - (அச்சில்)

வாசகர்கள் ஆவலோடு எதிர்பார்க்கும் 'சோ'வின்

கருத்தாழம் மிக்க நகைச்சுவைப் புத்தகங்கள்

1. கூவம் நதிக்கரையினிலே!
2. வாஷிங்டனில் நல்லதம்பி
3. சர்க்கார் புகுந்த வீடு
4. ஒண்ணரைப் பக்க நாளேடு
5. துக்ளக் படம் எடுக்கிறார்!

மேலும் தரமான புத்தகங்களுக்கு எழுதுங்கள்

## அல்லயன்ஸ் கம்பெனி

ஸ்தாபிதம் 1896 போன் : 4941314

நூற்றாண்டை நெருங்கும் முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்
244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.



புன்னகைக்கு ஒரு விஜயா
பொன் நகைக்கு ஒரு சாந்தி

மங்கையரின் அழகுக்கு அழகு சேர்க்கும் பொன் ஆபரணங்களுக்கு கைராசியான நிறுவனம்

## சாந்தி கோல்டு ஹவுஸ்





72, உஸ்மான் ரோடு,
தி.நகர்,
சென்னை - 600 017.
தொலைபேசி : 441730

எங்கள் மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

## நீங்கள் இல்லாமலா இந்தப் போட்டி ?

18 வாரங்களுக்கு.
(சென்னைவாசிகளுக்கு மட்டும்)

## ஒரு சவரன் தங்க நகை பரிசு

5 பெண்ணுக்கு மேலான பதவி

மனைவி / தாய்

இதுவா ? அதுவா ? எழுதுங்கள்

மேலும் விபரங்களுக்கு தி.நகர் பனகல் பார்க்கில் (நல்லி) பஸ் ஸ்டாப் எதிரே உள்ள பாஹிமாஸ் விளம்பரப்பலகையை பாருங்கள்.

பாஹிமாஸ்

ஜுவல் ஹவுஸ்

78, உஸ்மான் ரோடு,
(ரங்கநாதன் தெரு எதிரில்),
தி.நகர், சென்னை 600 017.
போன் : 445744, 446073



சென்னை உஸ்மான் சாலையில் மட்டும்

SIBI ADS

உங்கள் கணவரின் கண்ணுக்குக் குளிர்ச்சி!

உங்களுடைய பட்ஜெட்டை மீறாத நேர்த்தி!!

உங்களுக்காக விசேஷமாக, விதவிதமாக வளமான கற்பனையில் தயாரிக்கப்பட்ட புடைவைகள்!!
உங்களுக்கென்றே வரும் எங்கள் விசேஷ விற்பனைகள்
எஜமான், மீனா, பத்மினி, ஹீரா
மற்றும்
மதுரை, சேலம், ராசிபுரம், குண்டூர், கத்வால், மைசூர் தயாரிப்புகள்
உங்களை அன்புடன் அழைக்கிறோம்.

## VIJAY'S BOUTIQUE

(Ph : 8251366)
(A Unit of NRG Group)
1, Thilak Street,
(Off : Bazulullah Road),
T. Nagar, Madras - 600 017.

தரமே எங்கள் தாரகம்




ஃ
கல்கி





1994
மே 8
மலர் : 52
இதழ் : 41
பவ
சித்திரை 25


தமிழ்த்திருநாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்

# கொடி இழந்த கோபாலன்!

சென்னை உயர்நீதி மன்றத் தீர்ப்பு வை.கோ.வை கொடியிழந்த கோபாலனாக்கியுள்ளது. தாற்காலிகத் தடை உத்தரவை நீக்க வேண்டும் என்ற கோரிக்கை மீது வழங்கப்பட்ட தீர்ப்புதான்; இன்னும் வழக்கு முடிந்த பாடில்லை என்றாலும் வை.கோ. தொடுத்த இந்த வழக்கில் அளிக்கப் பட்டுள்ள இடைக் காலத் தீர்ப்பு, தி.மு.க.வின் நிலையை நியாயப்படுத்து கிறது; வை.கோ.வின் வாதம் விதண்டாவாதம் என்பது உறுதிப்படுத்தப் பட்டிருக்கிறது.

'வை.கோ.வைக் கட்சியிலிருந்து நீக்கியதைத் தவறு என்று கூற முடி யாது, அது சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு சரியான முறையில்தான் நடந் திருக்கிறது' என்று நீதிபதி தமது தீர்ப்பில் கூறியிருக்கிறார். மேலும், தமது பிரிவுதான் உண்மையான தி.மு.க. என்று வை.கோ. வாதாடுவதை ஏற்க முடி யாது என்றும் அதற்கான ஆதாரங்களை அவரால் காண்பிக்க முடியவில்லை என்றும் நீதிபதி தெளிவுபடுத்தியிருக்கிறார். வை.கோ.வின் மேல் முறை யீடும் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளது. 'இதனால் தேர்தல் கமிஷனின் தீர்ப்பு பாதிக்கப்பட வேண்டியதில்லை' என்றும் நீதிபதிகள் கோரியுள்ளனர்.

தாம்தான் ஏதோ புத்தர் போலவும் தமக்குத் தி.மு.க. தலைமை மாபெரும் தீங்கு இழைத்துவிட்டது போலவும் பேசி வந்த வை.கோ.வின் முகமூடி கிழிக்கப்பட்டுவிட்டது.

நீதிமன்றத்தின் இந்த இடைக்காலத் தீர்ப்புக்குத் தலை வணங்கி வை.கோ. தமது வழக்கை வாபஸ் பெறுவதுதான் நேர்மை. ஆனால் 'முழுக் கொடி பிடிக்க முடியாவிட்டால் அரைக் கொடியோ, கால் கொடியோ பிடிப்பேன்' என்று நீதிபதிகள் முகத்திலேயே கரிபூச நினைக்கும் வை.கோ.விடம் இந்தப் பெருந்தன்மையை எதிர்பார்க்க முடியாது. கட்சியை உடைக்கத் தீர்மானித்தவர், 'கடைசிவரை ஒரு கை பார்த்து விடலாம்' என்று எண்ணுவார். இதற்குப் பொருமும் அவர் உள்ளம் தவிர புறத்தூண்டுதல்களும் இருக்கும். புலிகளின் தூண்டுதலும் இருக்கலாம்!

'தி.மு.க. என்ற பெயரைப் பயன்படுத்த முடியாது போனால் என்ன, கோ.தி.மு.க. என்று கூறிக் கொண்டால் போயிற்று' என்று அவர் எண்ணக் கூடும். ஏன் அவர் பிரிவு ஜெ.தி.மு.க. ஆகாமலிருந்தாலே ஆச்சர்யம்தான்!

# குங்ஃபூ காங்கிரஸ்!

சத்திய மூர்த்தி பவன் வாசலில் தமிழக காங்கிரஸ் நடத்திய குங்ஃபூ நாடகம் ஒரு புறமிருக்கட்டும். இத்தகைய யுத்த களம் வேறு பல மாநிலங்களுக்கும் பரவும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது!

'பல மாநிலங்களில் பொதுத் தேர்தல் வருகிறது; காங்கிரஸ் வெற்றி பெற வேண்டுமென்றால் அங்கெல்லாம் மாநிலக் காங்கிரஸ் தலைமையைத் திருத்தி அமைக்க வேண்டும்' என்று நரசிம்மராவுக்குத் தோன்றிவிட்டது. உடனே ஒவ்வொரு மாநிலத்துக்கும் ஒரு சீரமைப்புக் குழுவை உருவாக்கி அனுப்பி வைத்து விட்டார்!

தேர்தலுக்கு முன்பாக மாநிலத் தலைமையின் சிரத்தில் கை வைப்பது போன்ற அசட்டுத்தனம் வேறு இருக்க முடியாது. ஏற்கெனவே பாம்பும் கீரியுமாக மல்லுக்கு நின்று கொண்டிருப்பவர்கள், இந்தப் புதிய மாற்றங்களால் வேறு கொதிப்படைந்து போவார்கள். பிளவுகள் அதிகரிக்க, அது தேர்தலில் கட்சித் தலைமைக்கு எதிராகக் கோஷ்டி சேர்த்துக் கொண்டு செயல்படுவதில்தான் முடியும்.

கோஷ்டிப் பூசல்களுக்கெல்லாம் ஒரே தீர்வு, உட்கட்சித் தேர்தல்களை நடத்தி, அந்தத் தேர்தல் முடிவுகளை உறுதியாக அமுல்படுத்துவதுதான். பொதுத் தேர்தல் நெருங்கும் போது இதைச் செய்ய முடியாது. பொதுத் தேர்தல் முடிந்த பிறகு உட்கட்சி ஜனநாயகத்தைப் பலப்படுத்த வேண்டும்.

இதற்கிடையில் 'கட்சித் தேர்தல்கள், சட்டமன்றத் தலைவர் தேர்தல்கள் எல்லாம் ஒழுங்காக நடக்கும்; மேலிடத் திணிப்பு இராது' என்று கூறி, ஒற்றுமையை வளர்த்து, பொதுத் தேர்தலைக் காங்கிரஸ் சந்திக்க வேண்டும். இல்லையேல் சந்தி சிரிக்கும்.

# ஏழுமலையானைச் சுற்றி ஏழெட்டு அதிசயங்கள்!

நம்மில் பலர் திருப்பதிக்குப் பல முறை சென்று திரும்பியிருக்கிறோம். நீண்ட கியூவில் நின்று ஏழுமலையானை நெருங்கும் போது, ஜரகண்டிக்கு ஆளாகி பெருமாளிடம் பிரியா விடை பெற்று வெளியேறியிருக்கிறோம். கியூவில் நிற்பதிலேயே களைத்தும் போவதால், சில அபூர்வமான விஷயங்கள் நமக்குத் தெரிய வராமலே போயிருக்கின்றன.

அண்மையில் திருப்பதி சென்றபோது, திருப்பதி-திருமலை தேவஸ்தான அறங்காவலர்களின் தலைவரான செங்கல் ரெட்டியைச் சந்திக்க நேர்ந்தது. எளிய தோற்றமும் அதற்கேற்ப அடக்கமான சுபாவமும் கொண்ட அவர் கல்கி வாசர்களுக்காக அந்த அரிய தகவல்களை விவரித்தார்:

பாலாஜி சந்நிதிக்குள் நுழைவதற்கு முன் கருடாழ்வார் கருவறையை உள்ளடக்கிய வெளி மண்டபம் இருக்கிறதல்லவா? அதன் தூண்கள் ஒன்றில் வராக சிற்பம் தென்படும். வராக அவதாரத்தில் பூமியைக் காப்பாற்றித் தந்தவர் தம்முடைய அம்சமேதான் என்றாலும் திருமலையில் வந்து குடியேற விரும்பிய பெருமாள், வராக மூர்த்தியிடம் அனுமதி வேண்டினாராம். அவரும் 'உம்மோடு சேர்ந்து எனக்கும் பக்தர்கள் வணக்கம் தெரிவிப்பார்களென்றால் சம்மதம்' என்று கூறி நிபந்தனையோடு இடமளித்தாராம். "இன்றைக்கும் இந்த வராகத்துக்கு இங்கு சிறப்புப் பூஜை உண்டு. தவிர திருப்பதி அருகே வராக க்ஷேத்திரமும் ஒன்று உள்ளது" என்று கூறினார் செங்கல் ரெட்டி. "சர்வ லோக நாயகனின் அடக்கம் எப்படிப்பட்டது பார்த்தீர்களா?"



சந்நிதிக்கு இருபுறமும் உள்ள துவார பாலகர்களுக்கு "ஜெயன்", "விஜயன்" என்று பெயர்கள். முன்காலத்தில் மன்னர்களை "ஜெயவிஜயீ பவ" என்றுதானே வாழ்த்துவார்கள்! இனி சரித்திர நாவல்கள் படிக்கும் போது இந்த வாழ்த்து அர்த்தமுடையதாக நமக்கு விளங்கும் அல்லவா!

சுவாமி தரிசனம் முடிந்து, சடாரி சார்த்திக் கொண்டு, துளசி தீர்த்தம் அருந்தி வெளியே வந்தால், இலவச சாப்பாடு டிக்கெட் கொடுப்பார்கள். ஒரு நாளைக்குப் பத்தாயிரம் டிக்கெட்களுக்கு மேல் இங்கு விநியோகமாகின்றன.

சாப்பாட்டு நினைவோடு பிராகாரத்தைச் சுற்றிக் கொண்டு போய் விடாமல் கொஞ்சம் தெற்கே கவனத்தைத் திருப்பினால் உலோக விக்கிரகங்கள் பலவற்றுடன் ஒரு சந்நிதி உள்ளது. வாலி, சுக்கிரீவன், அங்கதன், அனுமார் உள்பட பல அபூர்வ வடிவங்களைக் காணலாம்.

பக்கத்திலேயே மடப்பள்ளி. அதன் சுவரில் கம்பிகள் ஏதுமற்ற சதுரமான ஒரு ஜன்னல். அதற்கு நேர் எதிரே வகுளாம்பிகா அமர்ந்திருக்கிறாள். (கிருஷ்ணருக்கு யசோதைபோல் பாலாஜிக்கு வகுளாம்பாள்) மடப்பள்ளியில் சரியாகக் காரியங்கள் நடக்கின்றனவா என்று தாயார் சதா மேற்பார்வை விட்டு வருகிறாராம்!

இன்னும் சற்று மேற்கே சென்றால் விஷ்வக்சேனர் சந்நிதி உள்ளது. இவர் யார் தெரியுமா? பெருமாளின் சேனாபதி! கைதட்டி இவர் கவனத்தை ஈர்த்தும் காக போட்டும்(!) மக்கள் வணங்குகிறார்கள். தங்கள் குறைகளைப் பெருமாளிடம் எடுத்துரைப்பார் என்று நம்புகிறார்கள். ''பாண்டியன் மகள்'' தொடர்கதை கல்கியில் பிரசுரமாகி வந்தபோது, ''இது என்ன விஷ்வக்சேனன் என்று ஒரு புனை பெயரா?'' என்று யோசித்தவர்களுக்கு இப்போது தெளிவு பிறந்திருக்கும்.

இவரிடம் விடைபெற்று வெளியே வந்தால் ஒரு தூணுக்கும் சுவருக்கும் இடையே சந்து போல் சிறிய இடைவெளி. இதன் ஊடே தேகத்தை நுழைத்துவர, தூணில் உடல் உராய, உபாதைகள் அனைத்தும் நீங்கும் என்று நம்பிக்கை. சிலர் இத்தூணில் முதுகைச் சாய்த்துப் பின்புறம் கைகளை நீட்டி அணைப்பதும் உண்டு.

வைகுண்ட ஏகாதசியன்று மட்டுமே திறக்கப்படுகிற வைகுண்ட துவாரத்தின் கதவுகளைப் பார்த்து விட்டு மேலே நடந்தால், உண்டி என்னுவதற்கு மேற்குப் பிராகாரத்தில் நீண்டதாக ஒரு கண்ணாடிச் சுவர் எழுப்பிப் புதிதாகக் கூடம் உருவாக்கியிருப்பதைக் காணலாம். பொது மக்கள் கண்ணாடி வழியே கண்காணிக்கலாம்- அவகாசம் உள்ள வரை. தவிர, பெருமாளைச் சேவிக்கக் கியூவில் நிற்கும் இருவர் அன்றாடம் சிறப்பு அழைப்புப் பெற்று உள்ளே அழைத்துச் செல்லப்படுகிறார்கள். இப்படி மேற்பார்வையிட அனுமதிக்கப்படுகிறவர்களே பேராசை பிடித்து கொஞ்சம் அள்ளிக் கொள்ளவும் சில சமயம் முனைவதுண்டாம். ஆனால் பெருமாளையா ஏமாற்ற முடியும்! சிக்குவது உறுதி.


• திருக்குளம்

**வ**டக்குப் பிராகாரத்துக்கு வந்தால் விமானத்தில் ஒரு பெருமாள் தெரிவார். மொன்மயமான அந்த விமானத்தையும் அதில் ஜொலிக்கும் பெருமாளையும் அநேகமாக எல்லாருமே தரிசித்துக் கன்னத்தில் போட்டுக் கொள்வார்கள்.

• தங்க விமானம்

ஆனால் அதைத் தாண்டி சற்று தூரம் நடந்தால், பிராகாரத் தூண்கள் இரண்டில், அன்னமாச்சாரியாரும் அவர் மகனும் சிற்பங்களாகக் காட்சி தருவதை ரொம்பப் பேர் பார்த்திருக்க மாட்டார்கள். இவ்விருவருக்கும் இடையில் சுவரைத் தட்டி ஆராய்ந்து பார்த்தபோதுதான் ஏராளமான செப்பேடுகள் அகப்பட்டன. அன்னமாச்சாரியார் கிட்டத்தட்ட 32,000 பாடல்கள் வடிவமைத்துள்ளார் என்று நம்பப்படுகிறது. அவற்றில் 12,000 மட்டுமே தற்போது கிடைத்துள்ளன. முகலாயர் படையெடுப்பின்போது திருமலை கோயிலில், இந்த இடத்திலும் வேறு சில கோயில்களிலும் ஒளித்து வைக்கப்பட்டன. பின்னால் வந்த சிலர் அவற்றின் மதிப்புத் தெரியாமல்

கமலமனராஜன்



* கோபுரவாசல்....

செப்புக்காக எடை போட்டு உருக்கிவிடக் காரணமாயினர். அன்னமாச்சாரியார் கீர்த்தனைகள் பலவற்றின் பாடாந்தரம் எப்படி என்பது கூட இன்று தெரியவில்லை. பல ராகங்கள் இன்று வழக்கிலேயே இல்லை!

இந்த விவரங்களை அறிந்து கொண்டு, இன்னும் சில அடிகள் எடுத்து வைத்தால் நரசிம்மர் சந்நிதியுள்ளது. அதற்கு நேர் எதிரே உள்ள தூண் பிளவு பட்டது போல் தோற்றமளிக்கிறது. பிளவுபட்ட தூண் வழியே நரசிம்மரைக் காணும்போது, நாமும் பிரகலாதனைப் போல் பக்திப் பரவசமாகலாம். இரண்யனிடம் இருந்தது போன்ற ஆணவமெல்லாம் நம்மிடம் எட்டிப் பார்க்கவும் கூடாது என்று பிரார்த்தித்துக் கொள்ளலாம்.

இதையும் தாண்டி ஒரு தூணின் அடிவாரத்தில் அனுமன் சிலை இருக்கிறது. இங்குதான் திருமலை கோயிலுக்கான அஸ்திவாரம் இடப்பட்டது என்று நம்புகிறார்கள். இந்த அனுமனுக்கு நித்திய பூஜை உண்டு.

பௌர்ணமியன்று மாலை சுமார் ஏழு, எழரை மணிக்குப் பிராகாரத்திலிருந்தவாறு நுழைவாயில் கோபுரத்தைப் பார்த்தால் சந்திரோதயம் ஆகிவிட, ஒளிரும் கோபுரமும் வட்ட நிலாவும் அருகருகே அற்புதமான தோற்றமளிக்கும்.

துவஜஸ்தம்பம் அருகே பள்ளி கொண்ட பெருமாளின் சிறிய உருவம் உள்ளது. உள்ளே சந்நிதியில் சாஷ்டாங்க நமஸ்காரம் இல்லை. இங்குதான் பக்தர்கள் எண்சாண் கிடையாக விழுந்து வணங்குகிறார்கள்.

திருமலைக் குன்றுகளைப் பசுமையாக வைத்திருக்க ஓர் அறக்கட்டளை இருக்கிறது. இதற்கு ஒரு கணிசமான தொகை செலுத்தி விட்டால், அவர் பெயரால் சில ஏக்கர்களில் மரம் வளர்த்துப் பராமரிப்பதோடு, அவர் குடும்பத்துடன் மூன்று முறை பாலாஜி தரிசனம் செய்ய வசதிகள் செய்து தரப்படுகிறது.

இது போன்ற அரிய தகவல்களையெல்லாம் விளக்கிச் சொன்ன செங்கல் ரெட்டி, இந்தப் பதவிக்கு ஆந்திரா முதல்வரால் நியமிக்கப்பட்டதே ஒரு ஆச்சர்யமான சம்பவம் தான்! எத்தனையோ பெரிய மனிதர்களின் பலத்த சிபாரிசுகளுடன் பலர் இந்தப் பதவிக்குப் போட்டியிட, விஜயபாஸ்கர ரெட்டிக்கு யாரைத் திருப்திப் படுத்துவது, யாருடைய மன வருத்தத்தைச் சமாளித்துக் கொள்வது என்று குழப்பம். கலங்கிய உள்ளத்துடன் உறங்கப் போக, செங்கல் ரெட்டி இருக்கிறாரே என்று பெருமாளே நினைவூட்டியிருக்கிறார்! அவ்வாறே சிபாரிசு பெற்ற எல்லாரையும் ஒதுக்கிவிட்டு செங்கல் ரெட்டிக்கு உத்தரவு போயிருக்கிறது!

இதில் மிகப் பெரிய வேடிக்கை என்ன தெரியுமா? செங்கல் ரெட்டி பத்து ஆண்டுகளாகத் திருப்பதி பக்கமே போனதில்லை! இத்தனைக்கும் அவர் நிறைவேற்ற வேண்டிய பிரார்த்தனை வேறு பாக்கியிருக்கிறது. ஆனாலும் 'இதோ, அதோ' என்று காலம்தான் கடந்து கொண்டிருந்தது. 'திடுதிப்'பென்று நியமன உத்தரவு வரவும் 'கரகர'வென்று கண்ணீர் விட்டபடி திருப்பதிக்கு விரைந்தார். முதலில் பிரார்த்தனையை நிறைவேற்றி விட்டுப் பிறகு பதவி ஏற்றார்!

பெருமாளாவது பிரார்த்தனையைப் பெற்றுக் கொள்ளாமல் விடுவதாவது! பதவியைக் கொடுத்தேனும் கறந்துவிட மாட்டாரோ!



## அடுத்த இதழில்....

**குழந்தைகளைப் போல் வளரும் நாய்கள்!**

- கவர் ஸ்டோரி

# வீரா



ரஜினி பாடகர் என்பதும், ரெண்டு பெண்டாட்டிக் கதை என்பதும், படம் பூஜை போடுமுன்பே அகிலமெல்லாம் தெரிந்து போன விஷயம்.

ஊரில் அம்மாவுக்கு ஏற்பட்ட அவமானத்தைத் துடைக்க, பாட்டுப் போட்டியில் கலந்து கொண்டு பரிசு பெற (வேறு வழி?) வரும் ரஜினி, பக்கவாத்தியமாக செந்தில் என்று மாமூலான ஆரம்பம்தான். ஜாமூனாக்கியிருப்பது கொஞ்ச நாளாய் ரஜினி நடிப்பில் தூக்கலாய்த் தெரியும் ஹ்யூமர். திருட்டு முழி, வழிசல், கொஞ்சல் என்று முற்றிலும் தடம் மாறி ஜமாய்த்திருக்கிறார். சண்டைக் காட்சிகளில் முன்னைத்தனை ஸ்பீடு தற்சமயம் இல்லாததற்கான காம்பன்ஸேஷன்?

மீனாவும் ரோஜாவும் அழகாக வந்து போகிறார்கள். அந்த ஜவுளிக்கடை ஸீனில் மட்டும் செமை கலாட்டா. மற்றபடி ஆறிப் போன பரோட்டா.

டைரக்டரை ஒரு வகையில் பாராட்ட வேண்டும். இவ்வளவு கொடுமையான ஒரு திரைக்கதையை (ஷாட்டுக்கு ஷாட் முந்தின படங்களையே ஞாபகப்படுத்துகிறது) வைத்துக் கொண்டு, என்னமாய்த்தான் எடுத்து முடித்தாரோ?

அந்த கோவில் கல்யாண சீன், தொடர்வதான ஆபீஸ் காட்சிகள் யாவும் பாலுமகேந்திரா உபயம். (ரெ.வா.கு.) சாருஹாசனிடம் பாட்டு கற்றுக் கொள்ளப் போகும் ரஜினியின் காதல் நடவடிக்கைகள், பாரதிராஜாவிடமிருந்து உருவப் பட்டவை. (வேதம் புதிது.) ஒரிஜினாலிட்டியை, தொட்ட கையால் தொட மாட்டார்கள் போலும்.

அப்புறம் இளையராஜா. மீண்டும் பழைய இளைய ராஜா. தேன், பால், இளநீர், கரும்புச் சாறு... வேண்டாம். என்ன சொன்னாலும் பொருந்தாது. அவரது இசையென் னும் இன்பவெள்ளத்தில் நீந்த வந்தவர்களை ஏமாற்ற வில்லை.

சமீப காலத்தில் இத்தனை நீ--------ளப் படம் பார்த்த ஞாபகமில்லை. மறுபடி சிவகவி காலத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறோமா என்ன?

- ஆர்.பி.ஆர்.

# தியாக பூமி

## 56. மங்களத்தின் மரணம்

சம்பு சாஸ்திரி நெடுங்கரையை அடைந்ததும், நீக்ஷிதர் மங்களத்தைப் பற்றிச் சொன்னது உண்மைதானென்று அறிந்தார். அப்போது, பகவானுடைய கருணையின் ஒரு முக்கியமான அம்சம் அவருக்குப் புலப்பட்டது. இந்த உலகத்தில் சம்பு சாஸ்திரி யாராவது ஒரு மனிதரை வெறுத்தார், தம்முடைய சத்துருவாகக் கருதினார் என்றால், அந்த மனிதர் சங்கர நீக்ஷிதர்தான். அப்பேர்ப்பட்ட சங்கர நீக்ஷிதர் மூலமாக ஈசன் தம்மை மங்களத்தின் மரணத்தறு வாயில் அவளிடம் கொண்டு சேர்த்ததை நினைத்து நினைத்து சாஸ்திரி மனம் உருகினார். இந்த ஓர் உதவி செய்ததன் பொருட்டு, நீக்ஷிதர் தமக்கு ஏற்கெனவே செய்துள்ள அபகாரங்களையெல்லாம் அவர் மன்னித்துவிடவும், அவரிடம் நன்றி பாராட்டவும் தயாராயிருந்தார். ஆறு ஏழு வருஷமாக மங்களத்தைத் தாம் கைவிட்டுவிட்டு இருந்ததே பிசகு. ஐயோ! இந்தச் சமயத்திலாவது தாம் வந்திராவிட்டால், அவள் கதி என்ன ஆகியிருக்கும்? தமக்குத் தான் அப்புறம் அடுத்த ஜன்மத்திலாவது மனச்சாந்தி உண்டாக முடியுமா?

தாம் பட்டணத்துக்குப் போன பிறகு, மங்களத்தின் வாழ்க்கை எப்படி நடந்தது என்பதைப் பற்றி அவளே சொல்லி சாஸ்திரி தெரிந்து கொண்டார். சாஸ்திரியின் வாழ்க்கை எவ்வளவு விசேஷ சம்பவங்கள் நிறைந்திருந்ததோ, அவ்வளவு மங்களத்தின் வாழ்க்கை விசேஷமற்றதாயிருந்தது. நாலைந்து மாதத்துக்கெல்லாம் அவள் தன் தாயாருடனும் செவிட்டு வைத்தியுடனும் நெடுங்கரைக்குத் திரும்பி வந்தாள். அப்போதிருந்து நெடுங்கரையில்தான் வசித்தாள். தான் இல்லாத போது சாவித்திரி பூரண கர்ப்பவதியாய் நெடுங்கரைக்கு வந்து வீடு பூட்டியிருப்பதைப் பார்த்து விட்டுத் திரும்பிய செய்தியை ஊரார் சொல்லத் தெரிந்து கொண்ட போது, அவள் மனம் ரொம்பவும்



புண்பட்டது. சாஸ்திரியிடமிருந்தும் கடிதம் ஒன்றும் வராமல் போகவே, தானும் தன் தாயாருமாகச் சேர்ந்து செய்த சதியை அவர் தெரிந்து கொண்டுதான் அடியோடு தன்னை வெறுத்து விட்டார் என்று மங்களம் எண்ணத் தொடங்கினாள். அது முதலே, மங்களத்துக்கும் அவள் தாயாருக்கும் ஒத்துக் கொள்ளாமல் போயிற்று. "பாவி! பழிகாரி! நீதானே அவரை ஊரைவிட்டு விரட்டினாய்?" என்று மங்களம் அடிக்கடி தன் அம்மாவை வைவதும், "நன்றியற்ற நாயே! எல்லாம் உனக்காகத்தானேடி செய்தேன்?" என்று அம்மா திருப்பி வைவதும் நாளுக்கு நாள் அதிகமாயிற்று. இந்த மாதிரி சண்டையினால், சொர்ணம்மாள் சில சமயம் மங்களத்திடமிடம் கோபித்துக் கொண்டு ஊரைப் பார்க்கப் போய்விடுவதும் உண்டு. அந்த மாதிரியே இந்தச் சமயமும் அவள் கோபித்துக் கொண்டு ஊருக்குப் போயிருந்தாள். செவிட்டு வைத்திமட்டுந்தான் அக்காவுக்குத் துணையாயிருந்தான்.

சாவித்திரி நெடுங்கரைக்கு வந்து வீடு பூட்டியிருப்பதைப் பார்த்துவிட்டுத் திரும்பினாள் என்னும் செய்தி சம்பு சாஸ்திரியைக் கதிகலங்கச் செய்தது. ஆனாலும், சாவித்திரியைப் பற்றி நினைக்க இப்போது தருணமில்லையென்பதை அவர் உணர்ந்தார். படுத்த படுக்கையாய்க் கிடக்கும் மங்களத்தைப் பராமரிப்பதுதான் இப்போது தம்முடைய முதன்மையான கடமை என்று கருதி, அந்தக் கடமையில் பூரணமாக ஈடுபட்டார்.

மங்களம் சென்ற இரண்டு வருஷ காலமாக மிகக் கொடிய தலைவலியினால் அடிக்கடி பீடிக்கப்பட்டு வந்தாள். அதற்குச் செய்து கொண்ட நாட்டு வைத்தியங்கள் ஒன்றும் பிரயோஜனப்படவில்லை. தான் செய்த கர்மத்தினால்தான் இந்த வியாதி தன்னைப் பீடித்திருக்கிறது என்று அவள் நம்பியபடியால், வைத்தியம் சாதாரணமாய்ப் பலிக்கக்கூடிய அளவுகூடப் பலிக்கவில்லை. இப்போது தலைவலியுடன் கரமும் சேர்ந்து அவளைப் பீடித்திருந்தது. ரொம்பவும் துர்ப்பலமாயுமிருந்தாள்.

அந்த நிலைமையில் தன் கணவர் வந்து சேர்ந்தது அவளுக்கு எவ்வளவோ சந்தோஷம் அளித்தது. சாஸ்திரியும் மிகவும் சிரத்தையுடன் அவளுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்தார். ஆனால், இதனாலெல்லாம் அவளுடைய வியாதி குணப்படவில்லை; அதிகமே ஆயிற்று.

"சாகிறதற்கு முன்னால் அவரை ஒரு தடவை பார்க்கும்படி கிருபை செய்ய வேணும், ஸ்வாமி!" என்று மங்களம் பகவானை அடிக்கடி பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள். அந்தப் பிரார்த்தனைக்குப் பகவான் மனமிரங்கித்தான் இப்போது சாஸ்திரியைக் கொண்டு வந்து சேர்த்ததாக அவள் நினைத்தாள். ஆகவே, இனிமேல், தான் பிழைக்கப் போவதில்லையென்றும், சீக்கிரம் மரணம் நேர்ந்துவிடும் என்றும் அவளுக்கு நம்பிக்கை உண்டாகிவிட்டது.

சம்பு சாஸ்திரி வந்ததிலிருந்து அவளு



டைய அலட்டலும் அதிகமாயிற்று. ஓயாமல் தான் சாவித்திரிக்குச் செய்த கெடுதலைச் சொல்லிச் சொல்லிப் புலம்பினாள். அப்போதெல்லாம் சாஸ்திரி அவளுக்குக் கூடியவரையில் சமாதானம் சொல்ல முயன்றார்.

**சா**ஸ்திரி வந்த ஒரு வாரத்துக்குள் மங்களத்தினுடைய பலஹீனம் ரொம்பவும் அதிகமாகிவிட்டது. இனிமேல், அவள் பிழைப்பதரிது என்று சாஸ்திரிக்கு நன்றாய்த் தெரிந்துவிட்டது. ஆகவே, அந்தண்டை இந்தண்டை போகாமல் சாஸ்திரி அவள் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தார்.

ஒரு மாதிரி மயக்கத்தில் ஆழ்ந்திருந்த மங்களம் கண்ணை விழித்தாள். சாஸ்திரியைப் பார்த்து, ''நீங்க நிஜமாகவே வந்திருக்கேளா? நான் சொப்பனம் காணலையே?'' என்று பலஹீனமான குரலில் கேட்டாள்.

''நான் நிஜமாகத்தான் வந்திருக்கேன், மங்களம்! இத்தனை நாளும் உன்னை நான் விட்டுவிட்டிருந்ததே பிசகு. அந்தப் பாவத்தை நான் எப்படித் தீர்க்கப் போகிறேனோ, தெரியவில்லை'' என்றார்.

''நீங்களா பாவம் செய்தவர்? இல்லவே இல்லை! நான் தான் பாவி! அம்மா பேச்சைக் கேட்டுக்கொண்டு அந்தக் குழந்தையைப் படுத்தாத பாடும் படுத்தினேன். அவள் எழுதின கடுதாசையெல்லாம் நீங்க பார்க்காமே கிழிச்சு நெருப்பிலே போட்டேன், அந்தப் பாவந்தான் என்னை இப்படி வதைக்கிறது! -ஐயோ! யாரோ கோடாலியாலே தலையிலே போடறாப்பலேயிருக்கே!''

''வேண்டாம், வீணா அலட்டிக்காதே, மங்களம்! ஸ்வாமியை நினைச்சுக்கோ. எப்பேர்ப்பட்ட பாவமாயிருந்தாலும் பகவான் மன்னிச்சுடுவார்'' என்று சொல்லி சாஸ்திரி கொஞ்சம் விபூதி எடுத்து மங்களத்தின் நெற்றியில் இட்டார்.

''ஐயோ! ஸ்வாமின்னா பயமாயிருக்கே!'' என்றாள் மங்களம். பிறகு, ''சாவித்திரி! சாவித்திரி! உன்னைச் சூடு போடறதற்கு வந்தேனே? பத்து மாஸத்துப் பிள்ளைத் தாச்சியா நீ வந்தபோது, உன்னைத் தெருவிலே நின்னு திண்டாட விட்டேனே? அந்தப் பாவந்தாண்டி என்னை இந்தப் பாடு படுத்தறது. சாவித்திரி! ஒரு வார்த்தை, 'உன்மேலே எனக்குக் கோபமில்லை, சித்தி'ன்னு சொல்லேண்டி!....'' என்று புலம்பினாள்.

மங்களத்தின் துயரம் சாஸ்திரியின் மனத்தை உருக்கி விட்டது. அவர் அவளைக் கருணையுடன் பார்த்து, ''மங்களம்! குழந்தை சாவித்திரி இங்கே இல்லை. அவள் மட்டும் இங்கே இருந்தால், கட்டாயம் உன்னை...'' என்று சொல்லிக் கொண்டு

## அருள்வாக்கு

ஓர் ஆயுள்கால ஸேமிப்பும் போதாமல் கடன் கஸ்தி வாங்கித்தான் கல்யாணம் பண்ண வேண்டும் என்ற நிலையில் அநேகக் குடும்பங்களை வைத்திருக்கிற வரையில் நமக்கு மற்ற பரோபகாரத் தொண்டுகள், ஜீவாத்ம கைங்கர்யங்களைப் பற்றிப் பேசவே லாயக்கில்லை என்று தோன்றுகிறது.

வெயில் காலத்தில் விசிறி, குடை தானம்; குளிர் காலத்தில் கம்பளி தானம்; பஞ்சகாலத்தில் அன்னதானம் என்றெல்லாம் சாஸ்திரங்களில் சிறப்பித்துச் சொல்லியிருக்கிற எல்லா

வருகையில், ''தாத்தா! பாட்டிக்கு உடம்பு என்னமாயிருக்கு?'' என்று கேட்டுக்கொண்டே சாரு உள்ளே வந்தாள்.

அவளை மங்களம் வெறிக்கப் பார்த்து, ''சாவித்திரி இதோ இருக்காளே! இல்லைன்னு சொன்னேளே! சாவித்திரி! சாவித்திரி! சித்தே எங்கிட்ட வாடி, அம்மா!'' என்றாள். சாஸ்திரிக்குக் கொஞ்சம் தூக்கி வாரிப் போட்டது. ஆனால் 'சாருவைப் பார்த்துவிட்டு, பாவம்! இவளுக்குப் பிரமை!' என்று எண்ணிக் கொண்டார்.

சாரு ஒன்றும் புரியாதவளாய்த் தாத்தாவின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டு, ''என் பேர் சாவித்திரி இல்லை. பாட்டி! என் பேர் சாரு!'' என்றாள்.

மங்களத்தின் வெளுத்துப் போன இதழ்களில் ஒரு புன்னகையின் சாயை காணப்பட்டது.

''எனக்குத் தெரியாதா? - நீ சாவித்திரி தான்-என்மேலே உனக்கு இன்னும் கோபம் போலேயிருக்கு'' என்று மங்களம் தட்டுத் தடுமாறிப் பேசினாள்.

சாரு பளிச்சென்று, ''கோபமா? உன் மேலே எனக்கு ஒரு கோபமும் இல்லையே, பாட்டி! தாத்தாவை வேணாக் கேட்டுப் பாரு!'' என்றாள்.

இதைக் கேட்டதும், மங்களத்தின் ஒளியிழந்த கண்களில் சிறிது பிரகாசம் உண்டாயிற்று.

''இல்லையா? உனக்கு என்மேலே கோபம் இல்லையா? நீ மகராஜியாயிருப்பே! நன்னாயிருப்பே!- தலையைப் பிளந்தது சட்டுனு நின்னு போச்சே!'' என்றாள் மங்களம். அப்போது அவளுடைய கண்கள் சொருகத் தொடங்கின. சீக்கிரத்தில் அவள் பிரக்ஞை இழந்தாள்.

பிறகு, மங்களத்துக்குச் சுய ஞாபகம் உண்டாகவேயில்லை. அன்று மாலை அவள் உயிர் தன்னுடைய சிறையிலிருந்து



தானங்களையும்விட, 'வரதக்ஷிணை' என்று அதிகாரப் பிச்சையாக தானம் வாங்குவதை நிறுத்துவதுதான் பெரிய தானம் என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றதெல்லாம் ஒரு பீரியட்டுக்கு (கால கட்டத்துக்கு) மட்டும்தான் பயனாவது. வரதக்ஷிணையோ இன்றைக்கு ஒருத்தனுடைய வாழ்நாள் முழுவதையும் (பெண்ணைப் பெற்றவனைத் தான் சொல்கிறேன்) பாதிப்பதோடு, எதிர்காலம் பூராவுக்கும் நம்முடைய சாஸ்திரீயமான வாழ்க்கை முறையையும், சாச்வதமான ஸ்திரீ தர்மத்தையும் பாதிப்பதாக இருக்கிறது. ஆனபடியால் வரதக்ஷிணை வாங்காமலிருப்பது நிரந்தர தர்மதானம் என்று சொல்லலாம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

விடுதலை அடைந்து சென்றது.

## 57. 'மாட்டேன்! மாட்டேன்!'

சாரு, மங்களத்துக்கு முன்னால் சாவித்திரியின் ரூபமாகத் தோன்றி, ''எனக்கு உன்பேரில் கோபமில்லை'' என்று ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்த அதே சமயத்தில், உண்மையான சாவித்திரி சென்னை ஐகோர்ட்டில் சாட்சிக் கூண்டில் கோபமே உருவெடுத்தவள்போல் நின்றாள்.

ஸ்ரீதரன் தன்னுடைய சபதத்தை நிறைவேற்றி விட்டான். உமாராணியின் மேல் நிஜமாகவே தாம்பத்திய உரிமைக்கு வழக்குத் தொடுத்து, அவளைக் கோர்ட்டிலே கொண்டு வந்து நிறுத்தியிருந்தான்.

கோர்ட்டில் அப்போது உமாராணியின் குறுக்கு விசாரணை நடந்து கொண்டிருந்தது. ஸ்ரீதரனுடைய வக்கீல் மிஸ்டர் நாராயணன், பி.ஏ., பி.எல்., குறுக்கு விசாரணை செய்து கொண்டிருந்தார். இந்த நாராயணன் தான் ஸ்ரீதரனுடைய பழைய சிநேகிதனாகிய நாணா என்று நாம் சொல்ல வேண்டியதில்லை. நாணாவின் மாமனார் காலஞ் சென்ற பிறகு அவன் பாடு ரொம்பவும் கஷ்டமாய்ப் போயிருந்தது. பெரிய பெரிய வக்கீல்கள் எல்லாம், ''காலங் கெட்டுப் போச்சு: கேஸுகள் குறைஞ்சு போச்சு!'' என்று சொல்லிக் கொண்டிருக்கையில், கத்துக்குட்டி நாணாவை யார் கவனிக்கிறார்கள்? ''எங்காத்துக்காரரும் கச்சேரிக்குப் போகிறார்'' என்ற தோரணையில்தான் அவன் கோர்ட்டுக்குப் போய் வந்து கொண்டிருந்தான்.

இப்படிப் பட்ட நிலைமையில், ஸ்ரீதரனுடைய கேஸ் அவனுக்குப் பெரியதொரு வரப் பிரசாதமாக வந்து சேர்ந்தது. இதன் மூலம் தான் பெயரும் பிரஸித்தியும் அடையலாம் என்றெண்ணினான். ''ஸ்ரீதரா! இப்போதைக்கு, பீஸ், கீஸ் ஒன்றும் நான் கேட்கவில்லை. கேஸ் ஜயிச்சதோ, அப்புறம் என்னைக் கவனிச்சுக்கோ, போரும் - ஓ! இந்தக் கேஸ் மட்டும் ஜயிச்சதுன்னா அப்புறம் உனக்கு என்ன குறைச்சல், எனக்குத் தான் என்னடா குறைச்சல்?'' என்று ஸ்ரீதரனை உற்சாகப்படுத்தினான்.

இப்படியாக, இந்தத் தாம்பத்திய உரிமை வழக்கு ஜயமடைய வேண்டுமென்பதில் ஸ்ரீதரனுக்கு இருந்த கவலையைக் காட்டிலும் நாராயணன், பி.ஏ.,பி.எல். அவர்களுக்குக் கவலை அதிகமாயிருந்தது. ஆகவே, மிகவும் சிரத்தையுடன் கேஸை நடத்தினார். அந்தச் சிரத்தையை இப்போது, உமாராணியைத் தாறுமாறாகக் கேள்வி கேட்டு, அவளுடைய மனம் கலங்கும்படி அடிப்பதில் காட்டினார்.

''புருஷன் வீட்டிலே நீங்கள் அப்படியெல்லாம் கஷ்டப் பட்டதாகச் சொல்கிறீர்களல்லவா? அந்தக் கஷ்டங்களை அந்தக் காலத்திலேயே யாரிடமாவது சொல்லியிருக்கிறீர்களா? உதாரணமாக, உங்கள் தகப்பனார் சம்பு சாஸ்திரி யிடமாவது சொல்லியது துண்டா?'' என்று கேட்டார்.

உமா சற்று யோசித்துவிட்டு, ''இல்லை'' என்று பதில் சொன்னாள்.

''அவ்வளவு கஷ்டம் நீங்கள்பட்டிருந்தால் ஏன் ஒருவரிடமும் அப்போது சொல்லவில்லை?''

''இஷ்டமில்லை: அதனால் சொல்லவில்லை.''

''நீங்கள் கஷ்டப்பட்டதாகச் சொல்வதெல்லாம் பொய்; அதனால்தான் சொல்லவில்லையென்று நான் ஊகிக்கிறேன்.''

''எனக்குப் பொய் சொல்ற வழக்கம் கிடையாது; உங்களுக்குத்தான் அதுவே தொழில்'' என்று உமாராணி பளீரென்று பதில் கூறினாள். இதை கேட்டு, கோர்ட்டில் வேடிக்கை பார்க்க வந்திருந்தவர்களில்



"ஆத்தா செஞ்ச கல்யாணம், ஆத்தா வுக்கு ஒரே புள்ளே, ஆத்தா சொன்னா கேட்டுக்கணும்'னு மூணு படங்களைத் தயாரிச்சு வெளியிட்டாரு இவரு!"

"அது சரி, என்ன பண்ணிகிட்டிருக் கார்?"

"ஆத்தா நான் மோசம் போயிட் டேன்னு புலம்பிக்கிட்டிருக்கார்!"

– குமார்

சிலர் சிரித்தார்கள்.

நீதிபதி கோபமாக மேஜையைத் தட்டி னார்.

ஆனால், அட்வகேட் நாராயணன் ஒரு ஸ்டிரைக்குச் சளைத்துவிடுவாரா? அவர் ஒரு கோணல் புன்னகை புரிந்து, "ஆனால், உங்கள் பெயரே ஒரு பொய்யாச்சே?" என் றார். அப்போது, வக்கீல்களிடையே சிரிப்பு உண்டாயிற்று.

"அநாவசியமான விவாதம் வேண் டாம்; குறுக்கு விசாரணை நடத்தும்!" என்று வாதி வக்கீலைப் பார்த்து நீதிபதி சொன் னார்.

மிஸ்டர் நாராயணன் மறுபடி கேட் டார்: "சரி,நீங்க சொன்னதெல்லாம் நிஜ மென்றே நினைச்சுக்குவோம், புருஷன் வீட் டிலே நீங்க ரொம்ப ரொம்ப ரொம்பக் கஷ்டப் பட்டதாகவே வச்சுக்குவோம். ஆனா, நீங்கதான் அவரை அவ்வளவு தூரம் தெய்வமாகப் பாவிச்சுண்டிருந்தேன்னு சொன்னேளே? இப்போ, அவர், 'போனதையெல்லாம் மறந்துடலாம்: புருஷன் மனைவியாகத் தாம்பத்தியம் நடத்தலாம்'' என்று சொல்றபோது, ஏன் அதை மறுக்கி றீர்கள்?"

உமா அப்போது ஆவேசத்தோடு பதில் சொன்னாள் "ஆமாம்; ஒரு காலத்தில் இவ ரைத் தெய்வமாக நினைத்தேன்; வாஸ்தவந் தான். அப்போது என்னை இவருக்குப் பிடிக்கவில்லை, என்னைப் பார்ப்பதற்கும் கசப்பாயிருந்தது. நான் இருக்கிறேனா, செத் தேனா என்றுகூடக் கவனிக்கவில்லை. இப் போது வந்து கூடி வாழலாமென்று சொல் கிறார். எதற்காக? என்பேரில் இவருக்குத் திடீரென்று பிரியம் வந்துவிட்டதா? இல்லை! என்னிடம் இருக்கும் பணத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டு சொல்கிறார்..."

இதுவரையில் உமாவின் முகத்தையே பார்த்துக் கொண்டும் அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டுமிருந்த ஸ்ரீதரன் இப் போது ஆத்திரத்துடன், "பொய்!பொய்!" என்றான். அவன் மெதுவாகத்தான் சொன்னானென்றாலும், நீதிபதி உள்படக் கோர்ட்டிலிருந்த பெரும்பாலோருக்கு அது கேட்டது.

உமா ஸ்ரீதரன் பக்கம் திரும்பி அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அந்தப் பார்வையின் தீக்ஷ்ணியத்தைச் சகிக்க முடியாமல் ஸ்ரீதரன் தலை குனிந்து கொண்டான்.

"ஆமாம், மறுபடியும் சொல்றேன். என்னிடமுள்ள பணத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டுதான் இப்போது கிருகஸ்தாசிரமம் நடத்த வந்திருக்கிறார்" என்றாள் உமா.

உடனே, நீதிபதியின் பக்கமாகத் திரும் பிப் பார்த்துச் சொன்னாள்: "இது நியா யமா? இது தர்மமா? நீங்களே சொல்லுங் கள். ஒரு பெண்ணை அவள் பேரில் இஷ்ட மில்லாத புருஷனுடன் வாழும்படி நிர்ப்பந் தப்படுத்துவது நீதியா? தெய்வத்துக்குத் தான் அடுக்குமா? உலகமெல்லாம் 'சுதந் திரம், சுதந்திரம்' என்று முழங்கிக் கொண் டிருக்கும் இந் நாளில் ஒரு பெண் பேதை யைச் சட்டத்தின் பேரால் இத்தகைய கொடு மைக்கு ஆளாக்கலாமா? மனைவியைப் புருஷன் தள்ளி வைத்தால், மனைவி கோரக் கூடிய பாத்தியதை என்ன? ஜீவனாம்சந் தானே? அந்த மாதிரி நானும் இவருக்கு ஜீவ னாம்சம் கொடுக்கத் தயாராயிருக்கிறேன். ஆனால் இவருடன் சேர்ந்து வாழ்வதற்கு மட்டும் சம்மதிக்க மாட்டேன்! ஒரு நாளும் மாட்டேன்!"

இந்த மாதிரி உமாராணி உரத்த குரலில் ஆவேசம் வந்தவள் போல் கூறியபோது, கோர்ட்டில் வேடிக்கை பார்க்க வந்திருந்த வர்களில் பெரும்பாலோர் திடுதிடுவென்று பெஞ்சுகளைத் தட்டியும் கை கொட்டியும் ஆர்ப்பரித்தார்கள்.

நீதிபதி மிகவும் கோபமாக நிமிர்ந்து உட்கார்ந்தார். கோர்ட் ஸார்ஜெண்ட் "ஸைலென்ஸ்!" என்று கத்தினான்.

மிஸ்டர் நாராயணன் மறுபடியும் உமா வைப் பார்த்து, "ரொம்பப் பதட்டப் படாமல் பதில் சொல்லுங்கள்; உங்களைக் கல்கத்தாவிலிருந்த வழிப்போக்கர்களுடன் கூட்டி அனுப்பியபோது எட்டு மாதம் கர்ப் பம் என்று சொன்னீர்களல்லவா? அது நிஜந் தானே?" என்று கேட்டார்.

"ஆமாம்; நிஜந்தான்!" என்றாள் உமா. அவளுக்குப் பழைய ஞாபகங்கள் குமுறிக் கொண்டு வந்தன. உடம்பில் படபடப்பு அதிகமாயிற்று. காலும் கையும் நடுங்கத் தொடங்கின. முன்னொரு தடவை, இதே சென்னை நகரில் போலீஸ் ஸ்டேஷனில் தனக்கு இம்மாதிரி படபடப்பு வந்ததும், தான் மூர்ச்சித்துக் கீழே விழுந்ததும் அவ ளுடைய நினைவில் வந்தன.

"சரி; அப்படின்னா, அந்தக் குழந்தை என்ன ஆச்சு?" என்று வாதி வக்கீல் கேட் டார்.

உமா திகைத்து நின்றாள். பிரதிவாதி வக்கீல் ஆபத்சகாயமய்யர் பளிச்சென்று எழுந்திருந்து, "நான் ஆட்சேபிக்கிறேன். இந்தக் கேள்வி கேஸுக்குச் சம்பந்த மில்லை, யுவர் லார்ட்ஷிப்" என்றார்.

"ரொம்ப அவசியமான கேள்வி. யுவர் லார்ட்ஷிப்! பிரதிவாதி சொல்றது அவ்வள வும் கற்பனைக் கதை என்று நான் ருசுப் பண்றேன்" என்றார் நாராயணன் பி.ஏ., பி.எல்.

நீதிபதி, "ஆல் ரைட்!" என்று சொல்லி, உமாவைப் பார்த்து, "கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்" என்றார்.

அப்போது உமாவுக்கு நிஜமாகவே வெறி வந்துவிட்டது. உரத்த குரலில், "மாட்டேன்! மாட்டேன்! இதுவும் ஒரு சூழ்ச்சியா? பெண்டாட்டி பேரில் இருக்கும் ஆத்திரத்தைக் குழந்தைபேரில் காட்டலாம் என்ற உத்தேசமா? முடியாது; முடியாது!" என்று கத்தினாள். அப்படியே நின்ற இடத் தில் திடீரென்று மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்தாள்.

உடனே, கோர்ட்டில் பெரிய குழப்பம் உண்டாயிற்று. எல்லாரும் எழுந்திருந்து தலைக்கு ஒரு பக்கமாக ஓடினார்கள். "தண்ணீர் தண்ணீர்!" என்று சிலரும், "டாக்டர்! டாக்டர்!" என்று வேறு சிலரும் கத்தினார்கள். வக்கீல் ஆபத்சகாயமய்யர் தான் கொஞ்சம் புத்தியுடன் காரியம் செய் தார். ஓடிப் போய் உமாராணியைப் பிடித் துக் கொண்டு கீழே உட்கார வைத்தார். இன் னொரு வக்கீல் கொண்டு வந்த ஜலத்தை முகத்தில் தெளித்தார்.

நீதிபதி, "அந்த அம்மாளை அப்புறப் படுத்தி வீட்டுக்குக் கொண்டு போங்கள். கேஸைத் தள்ளிப் போடலாம்" என்றார்.

இதற்குள், உமாவும் கொஞ்சம் தெளி வடைந்து எழுந்திருக்கவே, அவளை அழைத்துக் கொண்டு போய் வெளியில் உள்ள மோட்டாரில் ஏற்றினார்கள்.

ஸ்ரீதரன், பாவம், இதெல்லாவற்றை யும் பார்த்துக் கொண்டு நின்றான். உமா வினுடைய நிலைமை அவனுக்கு ஒரு பக்கம் பரிதாபத்தை உண்டாக்கிற்று. மற் றொரு பக்கத்தில், தனக்கு ஜீவனாம்சம் கொடுப்பதாக அவள் சொன்னதை எண்ணி எண்ணி ஆத்திரப்பட்டான்.

உமாராணி வெளியே சென்றதும், வாதி வக்கீல் நாராயண அய்யர், நீதிபதியைப் பார்த்து, "யுவர் லார்ட்ஷிப்! இந்தக் குழந்தை விஷயம் கேஸின் போக்கையே மாற்றக் கூடியதாயிருக்கிறது. பிரதிவாதி யின் தகப்பனார் சம்பு சாஸ்திரிக்குக் கோர்ட் சாட்சியாக ஆஜராகும்படி அர்ஜெண்ட் ஸம் மன்ஸ் அனுப்ப வேண்டும். அவர் மூலமாக இந்தக் கேஸில் ரொம்ப உண்மை வெளி யாகக் கூடும்" என்றார்.

"ஆல் ரைட்!" என்றார் நீதிபதி.

(தொடரும்)

## சின்ன வயது; பெரிய சாதனை!

●● ருச்சி சட்டாவிற்குப் பன்னிரண்டு வயது தான் ஆகிறது. பதின் மூன்று மொழிகள் பேசுகிறாள். அத் தனை மொழிகளில் 'டப்பிங்' செய் கிறாள்; பாட்டுப் பாடுகிறாள்!

நான்கு ஆண்டுகளுக்கு முன் 'தேரி பாஹோன் மே' என்ற இந்திப் படத்திற் காக ருச்சி, தனது சாதனையைத் தொடங் கினாள். இதுவரை 1500 ரேடியோ விளம் பரங்களில் 'குரல்' கொடுத்திருக்கிறாள்.

'வீக்லி'

– சேலம் சக்திக்கொடி



●● காளையை முன்னாலிருந் தும், கழுதையைப் பின்னாலிருந்தும், மூட்டாளை எந்தப் பக்கத்திலிருந்தும் நெருங்காதே!

- ஒரு யூதப் பழமொழி
- அ. ஷண்முகசுந்தரம்

●● சில நாட்களுக்கு முன்பு, ஓர் ஆங்கில பிரபல தினசரி சென்னையில் ஒரு குவிஸ் நடத்தியது. அதில் கேட்கப் பட்ட ஒரு கேள்வி : சிக்கன் 65! இதனை அறிமுகப்படுத்தியது யார்? அதற்கு ஏன் அந்தப் பெயர்? யாருக் குமே விடை தெரியவில்லை. குவிஸ் மாஸ்டரே விடையைக் கூறினார்; சென்னை புகாரி ஓட்டல்காரர்கள்தான். அது அறிமுகப்படுத்தப்பட்ட போது, ஓட்டலின் மெனு அட்டையில் இது 65வது ஐட்டம். அதனால் அந்தப் பெயர் வந்ததாம்.

- எஸ். சந்திரமௌளி



* தரை மட்டப்பாலமும் தற்போது முடிவுறும் நிலையில் உயர் மட்டப்பாலமும் (படம்: கோபிநாத்)

# பாலம் வந்தது; பரமானந்தம் தந்தது!

அரசாங்கத் திட்டங்கள் என்றாலே, சாதாரணமாக மதிப்பீடு பத்துக் கோடி என்றால் முடிக்கும் போது நூறு கோடியில் வந்து நிற்கும். இதோ... இதோ.. என்பார்கள். இழு, இழு என்று இழுத்தடித்து, நாலு வருடத்தில் முடிக்க வேண்டியதை ஏழெட்டு வருடங்களில், ஏனோ தானோ என்று முடிப்பார்கள்.

''ஈக்காடுதாங்கல் பாலத்தைப் பொறுத்தவரை அந்தப் பேச்சுக்கே இடமில்லை. இரண்டு வருடங்களில் முடிப்பேன் என்று சொன்னேன். இரண்டு மாதங்களுக்கு முன்பாகவே முடிவடையும் நிலையில் இருக்கிறது!'' என்கிறார் கே.கே. பரமானந்தம். தலைமைப் பொறியாளர் பதவியிலிருந்து அண்மையில் ஓய்வு பெற்ற பரமானந்தம், பிரம்மாண்டமான பாலங்களை நிர்மாணிப்பதில் திறமைசாலி என்ற பெயர் வாங்கியவர்.

சென்னைப் பெருநகரின் இன்னர் ரிங் ரோடு எனப்படும் உள்வட்டச் சாலையை தினசரி ஆயிரக்கணக்கான பேருந்துகளும், லாரிகளும் பயன்படுத்துகின்றன. கத்திப்பாரா முனையிலிருந்து, வட சென்னை மணலி எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை வரை 25 கிலோமீட்டர் சாலையை, நான்கு வழிப் பாதையாக அமைக்க உதவியது உலக வங்கி. எத்தனை அகலப்படுத்தினாலும், அடையாறு கடக்கும்போது, குறுகிய தரைமட்டக் குழாய்ப் பாலம் காரணமாக போக்குவரத்து ஸ்தம்பித்தது. இதனால் ஈக்காடுதாங்கலில், அடையாறு ஆற்றுக்கு மேல், உயர் மட்டத்தில் அகலமான பாலம் அமைக்கும் வேலையை முடிக்க வேண்டியிருந்தது. மழைக்காலத்தில் தரை மட்டப் பாலத்துக்கு மேல் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி, போக்குவரத்தை நாட்கணக்கில் தள்ளாட வைக்கும் நிலைமையும் இதனால் தவிர்க்கப்படும்.

பவானி கூடுதுறைப் பாலம், வட

* தேங்காய் உடைத்து ஆரம்பித்து வைக்கிறார் கே.கே.பரமானந்தம்.



கோவை பாலம் என்று பிரபலமான பாலங்களைக் குறிப்பிட்ட சமயத்தில் முடித்துக் கொடுத்த பரமானந்தம் அவர்களிடம் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

சுமார் நாலு கோடி ரூபாய்ச் செலவில், நான்கு வழிப் பாதையோடு, இரு புறமும் நடைபாதையும் கொண்ட சுக்காடுதாங்கல் பாலம் ஒரு பொறியியல் சாதனையாகக் கருதப்படுகிறது.

காரணம்?

''உலக வங்கித் திட்டப் பொறியாளர் ஆலோசனைக் குழு, போக்குவரத்து

✱ உயர் மட்டப் பாலத்தின் அடிவாரத் தோற்றம் (படம்: கோபிநாத்)



நெரிசலைக் கருதி, இந்தப் பாலத்தைப் பாதி பாதியாக, இரண்டு கட்டங்களாகச் செய்து முடிக்கலாம் என்றார்கள். இரண்டு இருவழிப் பாதை கொண்ட பாலங்களாக அருகருகே கட்டி இணைத்து விடலாம் என்றார்கள். நெடுஞ்சாலைத் துறை நகர்ப்புற வளர்ச்சித் திட்ட அதிகாரிகள் இதனை மறு பரிசீலனை செய்தோம். ஒன்றன் பின் ஒன்றாகப் பாலத்தை உருவாக்குவதை விட, ஒரே சமயத்தில் திட்டமிட்ட இருபாலங்களையும் எழுப்பி, இரண்டையும் ஒன்றாக இணைத்து விட்டோம். எதிர்காலத்தில் மேலும் இந்தப் பாலத்தை விஸ்தரிக்க எண்ணினாலும் சுலபமாகச் செய்ய முடியும். அதையெல்லாம் முன்கூட்டியே திட்டமிட்டுச் செய்திருக்கிறோம். மேலும் முதலில் திட்டமிட்டபடியே நான்கு கோடி ரூபாயிலேயே வேலையை முடித்து உலக வங்கியின் பாராட்டைப் பெற்றிருக்கிறோம், ஆக இது ஒரு பொறியியல் சாதனை என்பதில் ஐயமில்லை!''

ஆற்றின் தரை மட்டத்திலிருந்து 15 முதல் 18 மீட்டர் வரை கீழே, பாறை மட்டத்தில் அமரும் வரை தூண்கள் நிறுவப்பட்டிருப்பதால், எழுபது டன் எடை வாகனப் போக்குவரத்தை எளிதாகத் தாங்கும் திறன் கொண்டது இந்தப் பாலம்.

''இதில் எனக்கு உறுதுணையாக, பக்க பலமாக இருந்தவர்கள் எனது சக எஞ்சினீயர்கள். யார் யார் இந்த மாதிரிப் பாலங்களை உருவாக்க சின்சியராக உழைப்பார்களோ, அவர்களை வைத்துக் கொண்டேன். அமைச்சர் ஒத்துழைத்ததால் இதில் எனக்குச் சுதந்திரமாகச் செயல்பட முடிந் தது.

''இன்னொரு முக்கியமான அம்சம் இதன் காண்ட்ராக்டர். கல்லூரியில் கணிதப் பேராசிரியராக இருந்த மாணிக்கம், இதன் காண்ட்ராக்டராகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டார். ஒருவிதத் தொல்லையும் இருக்காது என்று



✱ ஒவ்வொரு தூணும் பாறை மட்டத்தில் அமரும் வரை 15-18 மீட்டர் கீழே இறக்கப்படுகின்றன.

நான் அவருக்கு நம்பிக்கையூட்டினேன். சாதாரணமாக மூன்று - நான்கு வருடங்கள் ஆகும், இம்மாதிரி வேலை முடிய. இரண்டே வருஷத்தில் முடிப்பது என்பது ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டு நிறைவேற்றப்பட்ட சாதனை தான்!''என்கிறார் பரமானந்தம். பல டிபார்ட்மெண்டுகளோடு இணைந்து பணியாற்ற வேண்டிய கட்டங்களில் உடனடியாகப் பேச்சு வார்த்தைகளில்

இறங்கி, தாமதத்தைத் தவிர்த்திருக் கிறார் இவர்.

தமக்குப் பிறகு பொறுப்பேற்றுக் கொண்ட தலைமைப் பொறியாளர் எம்.கே. சண்முகம் சூபரின்டென்டிங் இஞ்சினியர் ஹனீஃபா ஆகியோரை இந்தப் பாலத்தைத் திட்டமிட்ட இலக்குக்குள் முடித்ததற்காப் பாராட்டு கிறார் பரமானந்தம்.

இருபத்து மூன்று வயதில், ஜூனியர் இஞ்சினியராக பொறுப் பேற்று, முதன் முதலாகத் தாம் கட்டிய பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்தை, அன்றைக்கு முதல்வராயிருந்த காமராஜர் திறந்து வைத்தபோது கிடைத்த மன நிறைவும், திருப்தியும் மறக்க முடியாதவை என்கிறார்.

அன்றிலிருந்து இன்று வரை அப்பழுக்கற்றவர் என்ற புகழும் பரமானந்தத்துக்கு உண்டு.

**ப**ரமானந்தம் கூறும் சில யோசனைகள் கவனத்துக்குரி யவை:

- சாலைகளுக்கு பட்ஜெட்டில் இன்னும் சற்றுக் கூடுதலாக நிதி ஒதுக்கலாம்.
- போக்குவரத்து வரியிலிருந்து ஒரு பகுதி, ஆட்டோமாட்டிக்காக நெடுஞ்சாலைத் துறைக்குக் கிடைக்கு மாறு சட்டம் கொண்டு வரலாம்.
- பாலங்களுக்கு டோல் வசூ லிக்கலாம். (கூடுதுறை-பவானி பாலத் துக்கு 96 லட்ச ரூபாய் செலவாயிற்று. டோல் வசூலில் 126 லட்ச ரூபாயை மூன்றே வருடங்களில் பெற முடிந்த தாம்.)
- புதிய சாலைகள் அமைப்பை எல்லாம் தனியார் வசம் விடலாம். பல திட்டங்களுக்குத் தொழிற் சாலைகளே முன் வந்து நிதியுதவி செய்யும். உதாரணமாக இந்த ஈக்காடு தாங்கல் பாலத்திற்கு மணலி காம்ப் ளெக்ஸிலிருந்து மட்டும் 60 லட்ச ரூபாய் கொடுத்தார்கள். ஏனென் றால் ஒவ்வொரு லாரியும் நின்று, தாமதம் ஏற்படுத்துவதால் உண்டா கும் பண விரயத்தைத் தடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில், தொழில்துறையே முதலீடாகத் தந்தது!

– சாருகேசி

# சுசீலாவின் காதல்



உதாதிபன்

செருப்பு சப்தம் கேட்டது. அப்பா வந்துவிட்டார். காலிலிருந்து விடுவிக்க முயன்று முடியாமல், மீண்டும் மீண்டும் முயற்சி செய்து.... சிந்தனை நிலையில் இல்லை என்பது செருப்பை உதறும் விதத்தி லேயே தெரிந்தது.

''சுசீ...!''

கோபம்தான்.

தங்கை சுசீலா ஓடிவந்தாள்.

''யாரவன்?''

''அப்பா...!''

''அதான் ஹோட்டல்லயிருந்து எவ னோடவோ ஜோடியா வெளியே வந் தியே.... மதியம் எதேர்சையாக அந்தப் பக்கம் வர்ற வேலையிருந்தது. கண்ணால பார்த்துத் தொலைச்சேன், யாரு...?''

''என் கூட வேலை செய்யறவர்.'' சுசீ லாவின் முகமும், குரலும் நடுங்கியது. அப்பா அவளை இமைக்காமல் பார்த்தார்.

''எத்தனை நாளா?''

''ரெண்டு மூணு வருஷமா இருக்கார்.''

''உன்னோட திருட்டுத்தனம் எத்தனை நாளா நடக்குதுன்னு கேட்டேன்.''

''நாலஞ்சு மாசமாத்தாம்பா பழக்கம்.''

''காதலா?'' அப்பாவால் சுற்றி வளைத் துப் பேச முடியாது. ''

''.......''

''கேட்கறேனே....''

சுசீலா ஒப்புதலாய்த் தலை யசைத்தாள். அம்மா சமைய லறையிலிருந்து முகம் காட்டி னாள். நிலைமை புரிந்து, அங்கேயே கலவரத்துடன் நின் றாள்.

''பேர் என்ன?''

''ரவீந்தர்.''

''நம்ம ஜாதியா?''

''தெரியாதுப்பா. கேக்கல!'' - சுசீலா சற்று தைரியம் அடைந்திருந்தாள். அப்பா மேற்கொண்டு சில வினாடிகள் மௌனம் சாதிக்க, அவளே தொடர்ந்தாள்.

''நாங்க ரெண்டுபேரும் ஜாதி, மதத் தைப் பத்திக் கவலைப்படல. ஒருத்தரோட மனசை இன்னொருத்தர்...'

''ஸ்... பேசாத. இந்த பாரு. அவன் நம்ம ஜாதியாவே இருந்தாலும் சரி. நான் ஒத் துக்க மாட்டேன். இன்னையோட விட்டுடு. மீறி, திரும்பவும் அவனோட பழகினா வீட் டோட நிறுத்திடுவேன். உன் ஆயிரத்து இரு நூறுரூபா சம்பளத்தை நம்பி இந்தக் குடும் பம் இல்ல. என்னோட சம்பாத்தியமே போதும். புரிஞ்சுதா...?''

அப்பா போய் விட் டார்.

கடைசி இரண்டு வரிகள் என்னையும் தாக்கியது போல உணர்ந்தேன். பி.காம் முடித்து மூன்று வருடம் ஓடிவிட்டது. இன்னமும் வேலைக் கதவு திறக்கவில்லை.

சுசீலா என்னைச் சமீபித்து அருகே அமர்ந்தாள்.

என்னிடம் உதவி கேட்கப் போகி றாளா? தண்டச் சோறாய் நிற்கும் எனது பேச்சு எடுபடுமா?

பேசுவதற்கு வார்த்தைகளைத் தேடு

வதற்குள், அம்மா வந்து, ''ஏண்டி... உங்கப் பாவோட குணம்தான் தெரியுமே. தெரிஞ் சும் ஏன் இந்த மாதிரியெல்லாம் பண்ற?'' என்றாள்.

''காதல் நாமா தேடிக்கறது இல்லம்மா. தானா வர்றது.''

''வக்கணையாப் பேசு. நீயாச்சு. அவராச்சு.. நடுவில நான் எதுக்கு?''

அம்மாவும் நகர்ந்து விட்டாள்.

''என்னால ரவியோட நேசத்தை உதற முடியாதண்ணா.''

''ஆனா அப்பாதான்...''

''அவரைப் பற்றி எனக்குத் தெரியும். சமாளிக்கறேன் பாரு'' என்றாள் கசிலா.

மறுநாள் மாலை.

காலிங்பெல் ஒலிக்க, போய்த் திறந் தேன். வெளியே நின்றிருந்த இளைஞன் புன் னகை செய்தான்.

''ஹலோ...என் பேர் ரவீந்தர். நீங்க தான் கசிலாவோட அண்ணனா?'' என்றான் கைகுலுக்கி.

''எஸ். உள்ள வாங்க!'' என்றேன்.

இவன் எதற்கு நேரடியாக, அதுவும் இன்றைக்கே வந்திருக் கிறான். நேற்றடித்த புயலின் பாதிப்பே இன் னமும் மறையவில் லையே!

கசிலா வெளிப் பட்டாள்.

''ஹாய்..கரெக்டா வந்துட்டீங்களே. உட் காருங்க. அண்ணா நான் தான் இவரை வரச் சொன்னேன்.

''ஏன்?''

'அப்பாவோட பேசத்தான்.''

''அவர்தான் ஏற் கெனவே...'' வார்த்தை களை முடிப்பதற்குள் அப்பா. ரவீந்தர் எழுந்து நமஸ்கரித்தான். அறி முகப்படுத்திக் கொண்டு, ''உங்களைப் பார்க்கத்தான் வந்தேன் சார்'' என்றான்.

''எதுக்கு?'' அப்பா வின் குரலில் கோபமும், எரிச்சலும் புலப்பட்டன.

''நேத்து நடந்ததை யெல்லாம் கசிலா எங் கிட்ட சொன்னா. சாரி, சொன்னாங்க. அவங்க எனக்குன்னு முடிவா கிறவரைக்கும் உரிமையோட பேசறது முறையில்ல...''

''உட்காருங்க.''

''இருக்கட்டும் சார். யாசகம் கேட்டு வந்திருக்கேன். உட்காரக் கூடாது.''

வார்த்தை அஸ்திரத்தை மிகச் சாதுர்ய மாகவே பிரயோகிக்கிறான் என்பது அப்பா வின் முகபாவத்தில் தெரிந்த மாறுதல் உணர்த்தியது.

''நேரடியாவே விஷயத்துக்கு வர்றேன் சார். எங்க காதலை உங்ககிட்ட மறைச்சது தப்புத்தான். மன்னிச்சிக்குங்க. பொதுவா கவே எல்லோர் வீட்டிலேயும் காதல்னாவே ஏதோ செய்யக் கூடாத குற்றமா நினைக்க றாங்க. ஆனா நீங்க அந்த மாதிரியில்லை, முற்போக்கான சிந்தனையுடையவர்னு கசிலா சொன்னாங்க. நான்தான் பயந்துக் கிட்டு, இப்போதைக்குச் சொல்ல வேண் டாம்னு அவங்களை சொல்லிவிடாம தடுத் துட்டேன். பட் நீங்களே கண்டுபிடிச் சிட்டீங்க. நிச்சயமா உங்களை ஏமாத்தறது எங்களோட நோக்கமில்லை. ஏதோ ஒரு வித பயம். மரியாதையில மறைச்சிட்



டோம். மற்றபடி எங்களோட விஷயத்தில முடிவெடுக்க வேண்டியது உங்க பொறுப்புத்தான் சார். இந்த நிமிஷமே பிரிஞ்சிடுங்கன்னு சொன்னீங்கன்னா அதுக்கும் சம்மதம்.''

மைகாட்! நான் அசந்து விட்டேன். சாமர்த்தியமான பேச்சு. அப்பா சுத்தமாய்த் தணிந்து விட்டார்.

''ஆமாம்பா. உங்களோட வார்த்தையை மீறி நாங்க நடக்க மாட்டோம். இது சத்தியம்!'' என்றாள் சுசீலாவும் தன் பங்குக்கு.

''முதல்ல உட்காருங்க. சுசீ.. போய் காப்பி கொண்டு வா...'' என்றார். பிறகு ரவீந்தரிடம் திரும்பி, ''நேத்து ஏதோ ஆத்திரத்துல பேசிட்டேன். எனக்கு மட்டும் சுசீயோட சந்தோஷத்தில அக்கறையில்லையா? சின்ன வயசு, அனுபவம் பத்தாது. உணர்ச்சி வேகத்தில ஏமாந்திடப் போறாளோன்னுதான் கண்டிச்சேன்.''

''என்னைப் பார்த்தா ஏமாத்தறவன் மாதிரியா சார் தெரியுது?'' புன்னகை மாறாமலேயே கேட்டான்.

அப்பா அசட்டுச் சிரிப்பை உதிர்த்தார்.

''சேச்சே...! உங்க அப்பா, அம்மா எங்கே இருக்காங்க?''

''சொந்த ஊர் கடவாசல்ல சார். சீர்காழிக்குப் பக்கம்.''

''அவங்களை வரச் சொல்லுங்க. பேசி முடிச்சிடலாம்.''



நடப்பவற்றை நான் கனவா, நனவா என்று புரியாத நிலையில் கவனித்துக் கொண்டிருந்தேன்.

ரவீந்தர் சென்றதும் சுசீலா உற்சாகம் பொங்க என்னைத் தேடி வந்தாள்.

''சொன்னபடியே சமாளிச்சிட்டியே!'' என்றேன்.

''ம். அப்பாவுக்கு நான் காதலிக்கிறதில கோபமில்லை. அவருக்கு இம்பார்டன்ஸ் கொடுக்காம, என் விருப்பத்துக்கு நடந்துக்கிட்டதுலதான் கோபம். அதனாலதான் அவரை வரச் சொன்னேன். அவர் பேசற விதமாப் பேசினதும் அப்பா தணிஞ்சிட்டார். புரியுதா?''

எனக்குப் புரிந்தது.

தாம் புறக்கணிக்கப் பட்டு விட்டோம் என்ற காரணத்தினால் நேற்று தவறாகத் தெரிந்த சுசீலாவின் காதல், இன்றைக்குத் தம்மிடமே முடிவுக்கு விடப்பட்ட காரணத்தினால், சரியாகத் தோன்றி விட்டது அப்பாவுக்கு. அவருடைய பலவீனம் தெரிந்து சுசீலா சாதித்துக் கொண்டு விட்டாள்!



● ஸ்ரீதேவி : பிடித்து விட்டது....

# இந்தியா விற்பனைக்கு

'இந்தியா விற்பனைக்கு..' என்னும் ஜோஷியின் படத்தில் கதாநாயகனாக நடிக்கிறார் சிவாஜி. வெப்புச் சிந்தனை உடைய இந்தக் கதையில் இன்னொரு நட்சத்திர ஜோடியும் நடிக்கிறார்கள். இரண்டாம் முறையாக தேசிய விருது பெற்ற மம்முட்டியும் ஸ்ரீதேவியும் தான் அந்த ஜோடி.

ஒரு வயசான சிங்கம் சோபாவில் சாய்ந்து உறுமுவதாகக் கற்பனை செய்து பாருங்கள். அதுதான் சிவாஜி பாத்திரம். பெயர் சத்யமூர்த்தி. இப்போது சிவாஜி எப்படித் தோற்றமளிக்கிறாரோ அதே கெட்டப்பில், (அதே வயசு, ஒட்டிய முகம், தாடி, பல்செட்) அப்படியே நடிக்கிறார்.

டைட்டிலை தக்க வைத்துக் கொள்ளவே கோர்ட்டு, கேசு என்று அலைய வேண்டியிருக்கும் என்று முன்னெச்சரிக்கையாகச் சொல்லி விட்டுத்தான் கதையையே சொல்லியிருக்கிறார், விஜயசக்கரவர்த்தி.

போர்வாள் தூக்கக் கூடிய தயாரிப்பாளர் கோவை செழியன், வித்தியாசமான சிந்தனை உடைய ஜோஷி. இருவருக்கும் கதை பிடித்தது போலவே, ஸ்ரீதேவிக்கும் கதாபாத்திரம் பிடித்து விட்டதாம்.

இசை, டாக்டர் ராசாசாமி..

சரியாக ஒரு மாமங்கத்துக்குப் பிறகு மீண்டும் மோகன் நடிக்க வந்திருக்கிறார், செல்வாவின் இயக்கமான 'மகேசன்' படத்தில் ஆக்ஷன் ஹீரோவாக. கதாநாயகியாக நடிக்க, புதுமுகத்தை சல்லடை போட்டுத் தேடியதில் டெல்லி மாடல் ஒன்று மாட்டியிருக்கிறது. பெயர் பாயல் மல்ஹோத்ரா. ஸ்கூட்டி விளம்பரத்தில் மாடலிங் செய்த பியூட்டி. 'பாயல்' என்ற இந்தி வார்த்தைக்குச் சலங்கை என்று அர்த்தம்!

* மம்முட்டி : சிவாஜியுடன் ஒரு படம்....

இந்திய மைக்கேல் ஜாக்சனாக அறிமுகப்படுத்தப்பட்ட, பிரபுதேவா, உற்சாகத்தில் இருக்கிறார். 'டான்ஸ் ஆடினாலே போதும், கதாநாயகன் ஆசை ஏன்? என்று 'இந்து' விமர்சனங்கள் பல கூறிய போதிலும் கதாநாயகனாக ஒப்பந்தம் செய்யப் பலர் தயாராக இருக்கிறார்களாம். ஆனால் ஒருவருக்குத் தான் கையொப்பமிட்டிருக்கிறார்.

அம்மா கிரியேஷன்ஸ் டி.சிவா தயாரிக்கும் புதிய படத்தில், இளைய ராஜா இசையில், பிரபுதேவா நடிக்கிறார். இயக்குபவர் கண்ணன். இவர் ஷியாகத் அலிகானுடன் சேர்ந்து பணியாற்றியவர். டைட்டில்? இளையராஜாவால் சூட்டப்பட இருக்கிறது!

மலையாள நட்சத்திர இயக்குநர் ஜோஷி ஒரு வணங்கா முடி. இவர் படங்களில் யாருடைய குறுக்கீட்டையும் விரும்ப மாட்டார். நமக்கு இளையராஜாவைப் பற்றியும் தெரியும். கதையை மாற்றக் கூடியவர். பாடலைப் புகுத்தக் கூடியவர். பாடலாசிரியரின் வார்த்தைகளை மாற்றக் கூடியவர். ரீ-ரிக்கார்டிங்கின் போது இயக்குநரையோ, தயாரிப்பாளரையோ கூட அனுமதிக்காதவர். இரண்டு பேரும் இணைந்து சத்யராஜின் சொந்தப் படமான 'ராஜாராணி' செய்யப் போவதாக அறிவிப்பு வந்ததே அதிசயம்தான். விட்டுக் கொடுக்கப் போவது யார்?

போனவாரம் வந்த அறிவிப்பு சந்தேகத்தைத் தெளிவு செய்திருக்கிறது. ராஜாராணிக்கு இசையமைப்பவர் ஏ..ஆர்..ஆர்! ஆனால் வேறு ஒரு விஷயத்தில் ஜோஷி காம்ப்ரமைஸ் செய்து கொண்டிருக்கிறார். ஜோஷியின் படங்களில் காமெடியோ, பாடல் காட்சிகளோ இருப்பதில்லை. என்றாலும் 'ராஜா ராணி'யில் கவுண்டமணி காமெடியும் ஐந்து பாடல்களும் உள்ளன.

முழு பக்க விளம்பரமோ, தடபுடலான பாவரோ, அசத்தலான பூஜையோ இல்லாமல், படுரகசியமாக 'பம்பாய்' படத்தை இயக்கிக் கொண்டிருக்கிறார், மணிரத்னம். இந்தப் படத்தை ஆரம்பித்த போது, அரவிந்தசாமி தன் தாயை இழந்த துயரத்தில் இருந்தார்.

மேலும் சுகாசினிக்கு ராஜீவ் மேனனை (கௌதமியுடன் கிசுகிசுக்கப்பட்ட காமிராமேன்) நடிக்க வைக்கும் விருப்பம் இருந்தது. ஆனால் மூவி டெஸ்டில் ராஜீவ் திருப்தி அளிக்கத் தவறியதால் மீண்டும் அரவிந்தசாமியை அணுகியிருக்கிறார்கள்.

அரவிந்தசாமியின் ஜோடியாக நடிக்கும் மனீஷா கெய்ராலா.. இளமை பதினாறு. இவர் நேபாள மன்னரின் நேரடி வாரிசு என்று கூட கேள்வி.

அயோத்தியில் நடந்த மதக் கலவரத்தையும், பம்பாய் குண்டு வெடிப்பு சம்பவத்தையும் இணைத்துக் கதை அமைத்திருக்கிறார் மணிரத்னம். கதையில் தேசிய நீரோட்டம் இருந்தால்தானே டப்பிங் செய்து 'டப்பு' பார்க்க முடியும்!

**பா**ர்த்திபனுடைய ஜாதகத்தில் என்ன தோஷமோ என்னவோ, பாவம், அவர் நினைத்தது எதுவும் நடக்க மாட்டேன் என்கிறது. 'உள்ளே வெளியே' தந்த வெற்றிக் களிப்பில், 'கருப்பண்ணசாமி' ஆரம்பித்தார். அது 'பீரியட்' படம் என்பதால், ஹொய்சால மன்னர்கள் ஆண்ட கர்நாடகா, மகாராஷ்ட்ரா பகுதிகளில் லொகேஷன் பார்த்திருந்தார்கள். சமீபத்தில் ஏற்பட்ட லொரி, ஹரியானா நடுக்கத்தில் இவர்களது லொகேஷன் இடங்களும் புரண்டு போய் விட்டன.

சரி.. மனைவியைக் கதாநாயகியாக வைத்தே சின்ன பட்ஜெட் படம் ஆரம்பிக்க நினைத்து 'பிரியமானவளே' என்று ஸ்கிரிப்ட் எழுதினார். அதுவும், சரிவரவில்லை. பார்த்திபனுக்கு அம்மை போட்டு விட்டது.

'சரிகமபதநி' என்று ஒரு ஸ்கிரிப்ட் தயாரித்தார். கதாநாயகிகள் கால் ஷீட் தொல்லையால் அதுவும் அபஸ்வரம் தட்டி நிற்கிறது.

இந்த நிலையில் பார்த்திபனுக்குக் கை கொடுத்திருப்பவர் 'சீவலப்பேரி பாண்டி' தயாரிப்பாளர் ஸ்ரீகாந்த். கே.சுபாஷ் இயக்கத்தில் 'பக்கா திருடன்' என்ற படத்தைப் பார்த்திபனை வைத்துத் தயாரிக்கிறார்.

"**ஏ**தோ ஒரு கெட்ட நேரம் 'ஐ லவ் இந்தியா'- எதிர்பார்த்த அளவு ஓடவில்லை. நானே ஒரு தயாரிப்பாளனாக இருந்து எக்கச் சக்கமாக விட்டவன் தான். அதனால் உங்கள் உணர்வுகளைப் புரிந்து கொள்கிறேன். பழசை மறந்து விடுங்கள். அடுத்தப் படம் எடுங்கள். நானே கால்ஷீட் தருகிறேன்.'' என்று சரத்குமார் வெள்ளைக் கொடியை காட்ட, தயாரிப்பாளர் ஜி.கே.ரெட்டிக்கு இன்ப அதிர்ச்சி.

உடனே 'மகாபிரபு'வை ஆரம்பித்து விட்டார். பத்து வருடங்களுக்கு முன்பு மாலைமலரில் நிருபராக இருந்த போது தன்னைப் பாதித்த ஓர் உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில் கதையை எழுதியிருக்கிறாராம் இதன் டைரக்டர் வெங்கடேசன்.

– ஹர்ஷா

மம்முட்டி வண்ணப்படம் : யோகா

---

## ஒரு விளையாட்டு வீரரின் மறுபக்கம்!



**1964**ம் ஆண்டு 'ரோம்' ஒலிம்பிக் போட்டியில் இந்திய ஹாக்கி அணி வெற்றி பெற உதவியவரில் ஒருவரான 'ஜகஜித் சிங்' இப்போது மிகவும் வறுமையில் வாடுகிறார்! அர்ஜுனா விருது பெற்ற இவர் சாப்பாட்டுக்கே சிரமப்படும் நிலை! 1964ம் ஆண்டு ஒலிம்பிக் தங்கத்தை வென்றதும், இவருக்கும் மற்ற ஆட்டக்காரர்களுக்கும் வேலையும், நிலமும் தருவதாக பஞ்சாப் அரசு அறிவித்ததோடு சரி! 30 வருடங்களாகியும் ஒன்றும் நடக்கவில்லை. ஒலிம்பிக் போட்டியிலும், ஆசிய விளையாட்டுப் போட்டிகளிலும் இவர் வென்ற தங்கப்பதக்கங்களை யாரோ திருடிச் சென்று விட்டதைத் தாங்க முடியாமல் இவர் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட காலம் ஒன்று உண்டு. பதக்கங்களின் மேல் அவ்வளவு பாசப்பிணைப்பு இவருக்கு! ஆனால் இப்போது வாழ்க்கையை நடத்த, அதே பதக்கங்களை விற்க வேண்டிய நிலைமைக்கு வந்து விட்டார்!

ஆதாரம் : 'ஸண்டே'

தகவல் : சம்பத் குமாரி

# OWN YOUR FLAT AT MADRAS

**FLATS UNDER CONSTRUCTION**




- ▲ உங்கள் பட்ஜெட்டுக்கு ஏற்ற வகையில் டீலக்ஸ் ஃபிளாட்டுகளும் பங்களாக்களும் சென்னை நகரின் பல்வேறு கௌரவமான பகுதிகளில் கிடைக்கும்.
- ▲ கட்டடப்பணியின் முன்னேற்றத்தையொட்டி, வட்டியில்லாத தவணைமுறையில் கட்டணம் செலுத்தலாம். அல்லது மொத்த கட்டணமும் செலுத்தி பத்து சதவிகிதம் தள்ளுபடி பெறலாம்.
- ▲ முன்னணி நிதி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி செய்து தரப்படும்.
- ▲ நவீன வசதிகளுடன் கூடிய கட்டடங்கள் ரசனையுடன் அழகாக வடிவமைக்கப்படுகின்றன.
- ▲ தரமான கட்டமைப்பு; நிர்ணயித்த காலக்கெடுவுக்குள் முடிக்கப்படும்.




## ASSOCIATED BUILDERS

2nd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017. INDIA
Ph : Off : 440224 / 440210. Res : 2345244. Fax : (044) 2344333

சூட்கேஸ் பற்றிய மேலோட்டமான சந்தேக எண்ணங்களுடன் டாக்ஸியை விட்டு இறங்கினான் பிரகாஷ். நேர் எதிரே கண்ணாடி முகப்புகளோடு ஹோட்டல் ஹாரிஸன் பூதாகரமாகத் தெரிந்தது! தொலைவில் கடல் அலைகள் வெள்ளை உடை உடுத்தி, பாரதிராஜாவின் தேவதைகளாக ஆடின.

வெள்ளையும், சிவப்பும் கலந்த உடைகள் உடுத்தி, ராஜா தலைப்பாகை வைத்திருந்த ஆள், இவனைக் கண்டு 'என்ன செய்யலாம்' என யோசனை பண்ணிய நேரம், 'தள்ளு' கதவைத் தள்ளி, உள்ளே போனான். ரிசப்ஷனில் பாப் தலைப் பெண் கண்ணியமான புன்னகையைக் காட்டினாள். கண்ணிமைக்க இயலாத அழகு.

அட்ரஸ் ஸ்லிப் எடுத்து, அறை எண்ணை நோக்கினான்.

''ஐ வாண்ட் மிஸ்டர் பாலேகர்.. ரூம் நம்பர் 115.''

# 4 நரகமான நகரம்

''ப்ளீஸ் பி சீட்டட். ஹி வாண்ட்ஸ் யு டு வெய்ட்.'' வார்த்தைகளில் சரளம். இடைவிடாத புன்னகை அவனையும் மலர வைத்தது!

சோபாவில் ஏற்கெனவே இரண்டு பெண்கள் இரண்டு கரைகளிலும் தனித்தனியாக அமர்ந்து யோசனையிலிருந்தவர். அவர்களுக்கு நடுவில் இருந்த தாராளமான பிரதேசத்தில் அமர்ந்தான். சூட்கேஸை எடுத்து மடியில் வைத்துக் கொண்டான்.

'மருத்துவப் பிரதிநிதி என்று வேலையில் அமர்த்திவிட்டு இப்பொழுது பியூன் போல் பெட்டி சுமக்க வைத்து விட்டார்களே... என்னுடைய இலட்சிய வேலை இது அல்ல. கோத்ரெஜ், டாட்டா, ஜான்சன் அண்ட் ஜான்சன்.. இவைகளில் எந்த அமைப்பிலாவது விற்பனைப் பிரிவில் நுழைய வேண்டும்... அது சரி, டாக்குமெண்ட்ஸ் என்று சொல்லித்தானே சூட்கேஸைத் தந்தான் அஜய். ஏகமாகக் கனக்கிறதே?'

நம்பர் மெக்கானிசம் உள்ள சூட்கேஸ் அது. நம்பர் பாலேகருக்குத் தெரிந்திருக்கும்.

டீ பாயில் முதல் தாளை ஆட விட்டுக் கொண்டிருந்த 'பிசினஸ் இண்டியா' இதழை எடுத்துப் பார்த்தான்.

''பிரகாஷ்!'' நிமிர்ந்தான்.

''ஸாஹிப்...'' எழுந்தான்.

''ஸூட்கேஸை மறந்துட்டேன். உனக்கு அனாவசிய சிரமம்.''

''நோ ப்ராபளம்.''

''அப்புறம்? வேறு எதும் வேலைகள் அஜய் கொடுத்தானா?''

''நோ... இது மட்டும்தான் சொன்னார்.''

''அப்போ... நீ ஆபீஸ்க்குப் போ...''

''ஓக்கே ஸாஹிப்...'' சூட்கேஸை பாலேகரிடம் மாற்றி விட்டான்.

''ஏதாச்சும் சாப்பிடறியா...! டீ... காபி....!''

'' இல்லை. வேண்டாம் சார்...''

''உட்கார்.'' அவனைத் தோள் தொட்டு அமர்த்தினார். ரிசப்ஷனிடம் நின்ற பேரர் ஒருவரிடம், 'லஸ்ஸி' ஆர்டர் பண்ணினார்.

''லஸ்ஸி வரும். குடிச்சுட்டுப் போ...''

அலுவலகம் வந்து அவன் சேர்ந்த சமயம், நேரம் நடுப்பகலைத் தாண்டி விட்டது!

''உட்கார்...பிரகாஷ்!'' என்றான் அஜய். ''பாலேகர் ஸாஹிப் என்ன சொன்னார்?''

''எதுவும் சொல்லலை...''

''கரெக்டா கொண்டுபோய்க் கொடுத்தாயல்லவா?''

''ஆமா... ஸாஹிப் ஏற்கெ



னவே என்னோட வரவை ரிசப்ஷனில் சொல்லி வைத்திருந்தார். அஜய் வேறு எதுவும் வேலை சொன்னானா... என்று கேட்டார்.. அவ்வளவுதான்.''

''ரொம்ப நன்றி. உன்னிடம் எந்த வேலையையும் தயக்கம் இல்லாமல் கொடுக்கலாம் என்று நினைக்கிறேன். வேறு ஆசாமியாய் இருந்தால்... ஆடி ஆடி போய்ட்டு... மாலை ஆறு மணிக்குத்தான் வருவான். உன்னோட பணி பிடிப்பைப் பாராட்டுகிறேன்.''

பிரகாஷ் குளிர்ந்து போய்ச் சிரித்தான்.

''ஓ.கே..நீ போகலாம். நாளைக்கு வேறு அவுட்டூர் உள்ளது! அதை அப்புறம் சொல்கிறேன்.''

**நா**ன்கு மணிக்கு நிஷா போன் பண்ணினாள். சேல்ஸ் டிப்பார்ட்மெண்ட் டைரக்ட் லைன் டயல் செய்திருந்தாள். அவளுடைய தென்றல் குரலைக் கண்டு பிடித்து விட்டான்.

''ஹலோ... பிரகாஷ் ப்ளீஸ்!''

''எந்த பிரகாஷ்?''

குரலை மாற்றிக் கொண்டான்.

''ரெப்ரெசென்டேட்டிவ். நியூலி அப்பாய்ண்டட்''

''ஓ... அவனா? அவன் இப்பத்தான் வெளியே போனான். ஒரு மாதிரியான ஆள். அவனுக்கு நீங்க என்ன வேணும்?''

''ஃபிரெண்ட்.''

''அவனைப் 'லவ்' பண்றீங்களா?''

''ஆமா... ஸோ வாட்?''

''அவனைப் போய் 'லவ்' பண்றீங்களேன்னுதான்...''

''ஹாலோ மிஸ்டர்! மைண்ட் யுவர் ஓன் பிசினஸ். நான் யாரையும் 'லவ்' பண்ணுவேன். பிரகாஷ் எங்கே?''

''ரிசப்ஷன் ரீட்டா, மாதுரியை விட அழகு. அவளோட இடுப்பு வளைவை பார்த்தால் சொர்க்கம் கிட்டும். அங்கே இருப்பான். ஒன் மினிட் மேடம்.''

பெனிட்டோ குமார்

போனை 'கட்' பண்ணிவிட்டாள். பிரகாஷ் மெலிதாக மனதினுள் மகிழ்ந்து கொண்டு எழுந்தான். ரிசப்ஷன் நோக்கி ஓடினான். கட்டாயம் ரிசப்ஷனுக்கு போன் போடுவாள்.

இவன் வந்த வேகம் கண்டு ரீட்டா வியந்தாள்.

''பிரகாஷ்... என்னாச்சு?''

''எனக்கு இப்ப ஒரு போன் வரும்.''

''இவ்வளவுதானா?'' என்று ரீட்டா கேட்பதற்கு முன் போன் வந்து விட்டது! லைனை அருகில் இருந்த இன்னொரு எக்ஸ்டென்ஷனுக்கு மாற்றி, பேசச் சொன்னாள்.

''ஹலோ...பிரகாஷ்!''

''ஸ்பீக்கிங்...''

''ரிசப்ஷன்லேயே இருந்தீங்களா?''

''ஆமாம்...''

''நான் உங்க கேபினுக்கு ஃபோன் போட்டேன். நீங்க ஆபீஸ்ல ஒரு பெண் விடாமல் விரட்டறீங்கனு அங்கே ஒருத்தன் என் கிட்ட கதை விட்டான்.''

''அச்சா...!''

'விடுங்க.. ஈவினிங் வீட்டுக்கு வாங்க! டாடி உங்களைப் பாக்கணுமாம்...''

''வர்றேன்...''

''வேலை ஈசியா இருக்குதா?''

''இருக்குது..''

''காதல் அவ்வளவு சுலபமில்லை, பிரகாஷ்!''

''அந்த சேல்ஸ் கேபின் ஆசாமி சொன்னதை மறந்துடு. அதுவும் நான்தான்...''

''இடியட்.. என்னையே ஏமாத்திட்டியே...''

''கம்மா..கம்மா...''

''கம்மா... கம்மா... ரீட்டாவோட இடுப்பையே பார்!''

நிஷா ஃபோனை 'கட்' பண்ணிய பிறகு, கேபினுக்குத் திரும்பினான். ஜனவரி மாத ஆர்டர் ஒன்றில் விடுபட்டுப் போன பொருள்களை அனுப்பச் சொல்லி அஜய் ஆணை பிறப்பித்துவிட்டுப் போனான். 'ரஃப்' பேப்பரில் விலாவாரியாக எழுதி, டெஸ்பாட்ச் டிபார்ட்மெண்ட போய், ஏற்பாடு செய்துவிட்டு வந்தான்.

இதற்குள் பாலேகர் வந்திருந்தார். கொஞ்சம் கோபமாகப் பேசி, அஜயை எங்கேயோ அனுப்பிக் கொண்டிருந்தார். அஜய் கண்களை உருட்டிக் கொண்டு வேகமாகப் புறப்பட்டுப் போனான்.

பாலேகர் இவன் அருகிலேயே அமர்ந்து, என்னவோ எழுதித் தள்ளிக் கொண்டிருந்தார். 'ஷில்பா' நிறுவனம் பாலேகர் என்ற அஸ்திவாரம் மீதே கட்டப்பட்டுள்ளது என்பது அவனுக்கு விளங்கியது! 'இந்த மனிதனின் சுறுசுறுப்பு இந்த மருத்துவ நிறுவனத்தை எட்டாத உயரம் தூக்கிப்போடும்' என்று எண்ணினான்.

'''அஜய்... அஜய்!'' திடீரென அழைத்தார் பாலேகர்.

''இப்பத்தானே அவர் வெளியே போனார்....?''

''ஓ! மறந்தே போனேன்.''

''எனி ஹெல்ப்?''

''ஒண்ணு செய்.. அஜய்யோட கேபின் போய் அவன் மேஜை ட்ராயர்ல.. மூணாவது டிராயர் - லைட் க்ரீன்ல ஒரு ஃபைல் இருக்கும்...''

''என்ன ஃபைல்?''

''அந்த ஒரு ஃபைல்தான் இருக்கும். எடுத்துட்டு வா...ப்ளீஸ்''

பிரகாஷ் புறப்பட்டுப் போனான்.

அஜய்யின் அலுவலக அறை தாறுமாறாக இருந்தது.

'ஹூம், ஓர் ஒழுங்குமுறை வேணாம்?' மூன்றாவது டிராயரை இழுத்தான். பாலேகர் அடையாளம் காட்டிய அந்த ஃபைல் நான்கைந்து பேப்பர்களோடு இருந்தது!

ஃபைலின் மேல் அட்டையை நகர்த்திக் கொண்டே அவனும் நகர்ந்தான். மேலாக இருந்த தாள் சந்தன நிறத்தில் கொட்டை கொட்டையான எழுத்துக்களைத் தாங்கியிருந்தது. ஜெராக்ஸ் காப்பி. ஆங்கிலத்தில் மூன்று பாராக்கள். சிவப்புப் பேனாவால் அடிக்கோடிட்ட வரிகளை மேலோட்டமாக மேய்ந்தான்.

"They mix into the formula, an adulterant, plus a poison. Strychnine hydrochloride, which gives the drug-user an extra kick."

அவன் இதயம் படபடத்தது! இது பிழை. எங்கேயோ ஏதோ பிழை உள்ளது...

அந்த நேரம் பியூன் ஒருவன் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வர, ஃபைலை மூடிக்கொண்டான். பேசாமல் பாலேகரை நோக்கிப் போனான். கொஞ்சமாகப் பயந்தான்.

பாலேகர் சாய்வாக ரிவால்விங் சேரில் அமர்ந்து சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார். இவன் அவரிடம் ஃபைலை மாற்றியவுடன்.. படக்கென டிராயர் திறந்து உள்ளே செருகிக் கொண்டார். அவரிடம் ஓர் அவசரம் கண்டான் பிரகாஷ்.

''பிரகாஷ்! நைன்ட்டி ஒன், எய்ட்டி ஃபைவ் இந்த ரெண்டு ஆர்டரும் டெஸ்பாட்ச் பண்ணலாம்னு வினோத் கிட்டே சொல்லிவிட்டு வந்துரு.''

அவர் கொடுத்த துண்டுக் காகிதத்தை எடுத்துக் கொண்டு டெஸ்பாச் டிப்பார்ட்மெண்ட் நோக்கிப் போனான்.

அவனுக்கு 'ஷில்பா' என்ற பெயரே விஷம் போல் கசப்பாய்த் தெரிந்தது. ஒரு வேளை 'ஷில்பா ஃபார்மசூடிக்கல்ஸ்' என்ற இந்த நிறுவனத்துக்கும், சற்று நேரத்திற்கு முன்பு அந்த ஃபைலில் தான் பார்த்த.. வார்த்தைகளுக்கும் எந்த விதமான தொடர்பும் இல்லாமல் இருக்கலாம். அஜய், பாலேகர் என்ற இந்த இரண்டு பேர்வழிகள் தான் பிழை புரியும் ஆசாமிகளாக இருக்கலாம்.

பாலேகர் கமெர்ஷியல் மானேஜர் என்ற பட்டம் சுமக்கிறார். அஜய்... அவனுக்கு என்ன பதவி என்றே விளங்கவில்லை. பாலேகரின் உதவியாளன் போல் அலைகிறான். நிச்சயமாக இந்த இருவரும்தான் ஏதோ வழிதவறின வேலைகளைச் செய்கிறார்கள். டைரக்டர்களுக்குத் தெரியாமல்... அந்தக் கண்ணாடி போட்ட, வட்ட முக எம்.டி.க்குத் தெரியாமல் செய்கிறார்கள். எம்.டி. வாரம் இரண்டு நாள் தான் வருவார். பூனாவில் உள்ள இதர கம்பெனிகளைப் பார்க்க மற்ற நாட்களை உபயோகப்படுத்துகிறார்..

அலுவலகம் விட்டு சிட்டி ட்ரெயினில் பாந்த்ரா போனான். ஸ்டேஷன் விட்டு வெளியே வந்து ஆட்டோ ஒன்றில் அமர்ந்து டாக்டர் பேட்கர் ரோடு போகச் சொன்னான். நிஷாவிடம் அனைத்தையும் சொல்ல வேண்டும்.

நிஷாவின் அப்பார்ட்மெண்ட் பில்டிங் அடியில், அவளுடைய அப்பாவின் மாருதி நிற்பதைக் கண்டவுடன் சிலிர்த்தான். நிஷாவின் அப்பா என்றாலே... அவனுக்கு அலர்ஜி!

படியேறினபோதே நிஷா எதிர்ப்பட்டாள்.

''அப்பா... உனக்காக வெய்ட் பண்றார்...''

''ஏன்..?''

அவள் பதில் சொல்லாமல், தோள் பற்றி உள்ளே இழுத்துப் போனாள்.

நிஷாவின் அப்பா கிருஷ்ணராவ் மீசையில்லாமலே கொடூரமாக இருந்தார். கண்ணாடி போட்டிருந்தார். ஏகப்பட்ட தொங்கு தசைகள். தொப்பை ரொம்பப் பெரியது! ஆளுமையின் சிகரமாக இருந்தார்.

''வாப்பா, வருங்கால சன்-இன் லா!''

''தாங்க்...யூ...''என்றான்.

''தாங்க்ஸ் எல்லாம் வேணாம். என்னோட நிபந்தனை ஞாபகமிருக்கா?''

''என்ன நிபந்தனை?''

''என் மகளைக் கட்டினால், என்னோட மெட்டல் கம்பெனியின் பொறுப்பையும் ஏத்கணும்.''

அவன் நிஷாவைப் பார்த்தான்.

(தொடரும்)



## என்னை இழந்தபோது...

- வானம் கிடைத்த போது
  சிறகை இழந்து விட்டேன்!
  வார்த்தை கிடைத்த போது
  கவிதை இழந்து விட்டேன்.

- பாதை தெரிந்த போது
  பயணம் இழந்து விட்டேன்!
  படிப்புக் கிடைத்த போது
  பாடம் இழந்து விட்டேன்!

- விதை கிடைத்தபோது
  நிலத்தை இழந்து விட்டேன்!
  இசை துளிர்த்த போது
  வீணை இழந்து விட்டேன்!

- அலைகள் வந்த போது
  நதி இழந்து விட்டேன்!
  கிரணம் கிடைத்தபோது
  நிலவை இழந்து விட்டேன்!

- அந்தி வந்த போது
  இரவை இழந்து விட்டேன்!
  ஆசை வந்த போது
  நெஞ்சை இழந்து விட்டேன்!

- ஞானம் வந்த போது
  'நான்' இழந்து விட்டேன்!
  என்னை இழந்த போது
  எல்லாம் பெற்று விட்டேன்!

- தமிழன்பன்

# சர்ச்சைக்குரிய ஒரு கு.க. சாதனம்

கர்ப்பத் தடைக்கு 99 சதவிகிதம் உதவும் ஒரு கு.க. சாதனம் விரைவில் அறிமுகமாகவிருக்கிறது. வழக்கம்போல் இதுவும் பெண்களுக்கானதே. கு.க.வைப் பொறுத்த மட்டில் பெண்கள்தான் சோதனைக் களனாக வேண்டும்; கஷ்ட நஷ்டங்களைத் தாங்க வேண்டும் என்பது எழுதப்படாத சட்டமாகி விட்டது! புதிய சாதனத்தின் பெயர்: டெபோ புரோவெரா (Depo Provera). இது எப்படி தன் பணியை ஆற்றும்...?






கர்ப்பமுற்ற நிலையில், பெண்களின் உடலில் சுரக்கும் ஒரு ஹார்மோன் புரோஜெஸ்டரான். இந்த ஹார்மோனை இரசாயன முறையில் செயற்கையாய் உற்பத்தி செய்து, இஞ்செக்ஷன் மருந்தாகத் தயாரிக்கிறார்கள். ஒரு டோஸ் இஞ்செக்ஷன் போட்டுக் கொண்டால், பெண்ணின் உடலில் கரு முட்டை வளர்ந்து முதிர்ச்சி அடைவது தடைப்படும்; கருப்பையின் வாயில் இயற்கையாய்ச் சுரக்கும் திரவம் கெட்டிப்பட்டு, விந்து உட்செல்ல தடைவிதிக்கும்; கருப்பையின் சுவர்ப்பகுதியில் கர்ப்பத்தைப் புறக்கணிக்கும் மாற்றங்கள் விளையும். இவ்வாறு மூன்று விதங்களில் செயல்படுவதால், மற்ற கு.க. சாதனங்களைக் காட்டிலும் மிக அதிகமான பாதுகாப்பைத் தரவல்லது டெபோ புரோவெரா என்கிறார்கள். ஒரு முறை ஊசி போட்டுக் கொண்டால் மூன்று மாதங்களுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும். பின்னர் மீண்டும் ஒரு டோஸ் போட்டுக் கொள்ளலாம் அல்லது பாதுகாப்பை நிறுத்தி விட்டு, ஒரு வருட காலத்துக்குள் கர்ப்பம் தரிக்கும் வாய்ப்புக்கு இடம் தரலாம்.

இந்த கு.க. சாதனத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்து, பம்பாய் பெண்கள் அமைப்புகள் ஆர்ப்பாட்டம் நடத்தியுள்ளன. டெபோ புரோவெராவினால் விளையக் கூடிய பக்க விளைவுகளைப் பார்க்கும்போது நமக்கே 'பகீரெ'ன்கிறது.

இந்தச் சாதனத்தைத் தொடர்ந்து, ஒரு வருடத்திற்கு உபயோகிக்கும் பெண்களுள் 57 சதவிகிதத்தினருக்கு மாத விலக்கு அடியோடு நின்று போகும். (புரோஜெஸ்டரோன் ஹார்மோன் கர்ப்ப காலத்தில் சுரக்கும் போது உடலில் ஏற்படுத்தும் விளைவுகள், செயற்கை புரோஜெஸ்டரோனினாலும் ஏற்படுமல்லவா?) வேறு சிலருக்கு ஒழுங்கில்லாத மாதவிலக்கு, தலைவலி, எடை கூடுதல், வயிற்றுவலி, தலை சுற்றல், சோர்வு போன்றவை ஏற்படவும் வாய்ப்பு உண்டு.

''இப்படி இயற்கைக்கு விரோதமான பக்க விளைவுகள் இருக்கலாமா...?'' என்றால் ''இதற்காக அவ்வளவாகப் பயப்பட வேண்டாம்'' என்கிறார் டாக்டர் கமலா செல்வராஜ். ''எந்த கு.க. முறையைச் சிபாரிசு செய்தாலும் சம்பந்தப்பட்ட நபரின் உடல் நிலை, பொது ஆரோக்கியம், குடும்பப் பின்னணி போன்றவற்றை விசாரித்து அறிந்தே செயல்படுவோம். எனவே மருத்துவர் கண்காணிப்பில் டெபோ புரோவெராவை உபயோகிப்பது தவறில்லை'' என்கிறார். மேலும் பிரசவமான கையோடு இந்தத் தடுப்பு முறையை மேற்கொண்டால், தாய்ப்பால் அதிகம் சுரக்க உதவும். மாதாமாதம் உதிரப் போக்கு இல்லாததால் இரத்தத்தில் ஹெமோகுளோபின் அளவு

குறைந்து, இரத்த சோகை விளையும் வாய்ப்புக்கே இடமில்லை- (ரத்த சோகை நம் நாட்டுப் பெண்களிடையே பெரிய பிரச்னை) என்பதும் டாக்டர் கமலா செல்வராஜின் வாதம். பெண்களுக்கான பிற தாற்காலிக கு.க.முறைகளைக் காட்டிலும் அதிக பாதுகாப்பானதும் சௌகரியமானதும் டெபோ புரோவெராதான் என்றும் சொல்கிறார் இவர்.

**க**ருப்பை சம்பந்தமான நோய்கள், மார்பக, சிறுநீரகப் புற்று நோய் போன்றவற்றுக்கு மருந்தாகவும் டெபோ புரோவெரா பயன்படுகிறதாம். "இது பற்றிய எல்லா விவரங்களையும் நம் பெண்களுக்குத் தெள்ளத் தெளிவாகப் புரிய வைக்க வேண்டும்" என்கிறார் டாக்டர் நித்யா மூர்த்தி. "இல்லாவிட்டால் மாதவிலக்கு அடியோடு நின்று போவதும், காலம் தப்பி வருவதும் நம் சமுதாய அமைப்பில் மிகுந்த இடைஞ்சலுக்கும் குழப்பத்துக்கும் வழி வகுப்பதோடு பதற்றத்தையும் ஏற்படுத்தும்" என்கிறார் இவர்.

இந்தோனேஷியாவிலும் இலங்கையிலும் இந்தப் பிரச்னைகளெல்லாம் வெற்றிகரமாகச் சமாளிக்கப்பட்டுள்ளன என்கிறார்கள், டாக்டர் அகஸ்டினாவும் டாக்டர் பசநாயகேயும். "மருத்துவ முகாம்கள் அமைத்து, டெபோ புரோவெரா பற்றி விவரமாக விளக்கி, கிராமத்துப் பெண்களையெல்லாம் அதை ஏற்றுக் கொள்ளச் செய்திருக்கிறோம்" என்கிறார் டாக்டர் அகஸ்டினா.

"இந்த ஊசி போட்டுக் கொள்ள வேண்டிய கட்டாயத்தின் காரணமாக மூன்று மாதங்களுக்கு ஒரு முறை 'செக் அப்'புக்கு வரும் கட்டாயம் பெண்களுக்கு... அதனால் வேறு கோளாறுகள் இருந்தாலும் கண்டு பிடித்து முளையிலேயே களைந்து விடலாம்" என்பது டாக்டர் பசநாயகேயின் வாதம்.

**உ**லகெங்கிலும் தொண்ணூறு நாடுகளில் முப்பது மில்லியன் பெண்கள் டெபோ புரோவெராவை உபயோகித்து வருகின்றனர். 1967 முதல் அந்நாடுகளில் பயன்படுத்தப்பட்டு வரும் இச் சாதனத்தை இந்தியாவில் அறிமுகப்படுத்த இவ்வளவு தாமதமாகியிருக்கிறதே...? காரணமில்லாமலில்லை. WHO என்ற உலக சுகாதார நிறுவனம் மார்பகப் புற்று நோய் குறித்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தது. அதன் முடிவுகள் வெளியான பிறகே இந்த இஞ்செக்ஷனை அறிமுகப்படுத்தலாம் என்று அமெரிக்க மருந்துக் கட்டுப்பாடு நிறுவனம் கட்டுப்பாடு விதித்திருந்தது. அந்த முடிவுகள் சென்ற வருடம் வெளியாகி, டெபோ புரோவெராவினால் அபாயம் இல்லை என உறுதியான பிறகே அமெரிக்க மருந்து கட்டுப்பாடு நிறுவனம் அதற்கு அங்கீகாரம் கொடுத்தது. அதன் பின்னரே நம் நாட்டுக்கு வந்துள்ளது டெபோ புரோவெரா.

டெபோ புரோவெராவின் பாதுகாப்பு குறித்து, பல தரப்புகளிலிருந்து உத்திரவாதம் கிடைத்துள்ளது. ஆனாலும் அது உண்டாக்கக் கூடிய பக்க விளைவுகளை இலேசில் ஒதுக்கி விட இயலாது. 'மாதவிடாய் நின்று போவதால் ரத்த சோகை ஏற்படாமல் இருக்கும்' என்று சொல்லப்படும் சமாதானத்தை ஏற்பதெனில், இயற்கை இன விருத்திக்காக அமைத்துத் தந்துள்ள உடல் கூறு நியதிகளையே அது கேள்விக்குறியாக்குகிறது. மேலும் தலைசுற்றல், வாந்தி, எடை கூடுதல் என விரியும் இதர பக்க விளைவுகளும் மிக இடைஞ்சலானவை. டாக்டர் ரமணி சிவராமன் சுட்டிக் காட்டும் வேறு சில அம்சங்களையும் நினைவில் கொள்ள வேண்டும்:

"ஒரு இஞ்செக்ஷனின் விலை 124 ரூபாய்! மத்திய தர வர்க்கத்துக்கு இது சரிப்படுமா? அரசாங்கத்தால் இலவசமாக இதனை அளிக்க முடியுமா? மூன்று மாதங்களுக்கொரு முறை தொடர்ச்சியாகப் பயன்படுத்த வேண்டிய மருந்தாயிற்றே... தடையின்றிக் கிடைக்குமா....?"

– நிர்மலா சக்ரவர்த்தி.




**து**ருக்கியில் கல்யாணம் நடந்தால், அதில் மணப் பெண், மாதுளம் பழத்தைத் தரையில் வீசி எறிவாள். அதனுள்ளிருந்து எவ்வளவு முத்துக்கள் சிதறுகிறதோ அதனை எண்ணுவார்கள். அவ்வளவு குழந்தைகள் அந்தப் பெண்ணிற்குப் பிறக்கும் என்பது அவர்கள் நம்பிக்கை. அதனால்தான் துருக்கியர்கள் குடும்பத்தில் குழந்தைகள் இப்பொழுதும் அதிகமாகத்தானிருக்கிறது. குடும்பக் கட்டுப்பாட்டின் எதிரி என்று மாதுளம் பழத்தைச் சொல்லலாமா?

நன்றி : "வுமன்ஸ் ஈரா"
– ஆர்.எஸ். கிருஷ்ணன்



# ஹேமலதாவின் கேள்வி ஞானம் *

**என்** மனைவி ஹேமலதாவிடம் ஒரு விசேஷமான குணம். யார் எந்தக் கேள்வி கேட்டாலும் நேரடியாக பதில் சொல்லமாட்டாள். மற்றொரு கேள்வியின் மூலமாகத்தான் பதிலைச் சொல்வாள்.

வீட்டுக்கு வருகிறவர்களை 'வாங்க' என்று கூறி வரவேற்பதை விட 'இப்பத்தான் வழி தெரிஞ்சுதா?' என்று கூறி வரவேற்பதுதான் அவள் ஸ்டைல். வந்தவர்கள் 'சௌக்கியமா' என்று கேட்டால், 'எனக்கென்ன கேடு?' என்றுதான் பதில் அளிப்பாள்.

நானும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்துவிட்டேன். அவளுடைய இந்த எதிர்க் கேள்வி கேட்கும் குணத்தை மட்டும் என்னால் மாற்ற முடியவில்லை.

முதலில் நயமாகச் சொன்னேன்.

''நான் ஒண்ணு சொன்னா, கோவிச்சுக்க மாட்டியே?''

''நான் எதுக்கு உங்ககிட்டே கோவிச்சுக்கப் போறேன்?''

''உன் கிட்டே எல்லா குணமும் எனக்குப் பிடிச்சிருக்கு. ஒரே ஒரு குணம்தான் பிடிக்கலை.''

''சொன்னாத்தானே தெரியும்?''

''எந்தக் கேள்வி கேட்டாலும், அதுக்கு பதிலா இன்னொரு கேள்வியைக் கேக்கறியே. அதான் எனக்குப் பிடிக்கலை.''

''நான் என்ன, வேணும்னா அப்படிக் கேக்கறேன்?''

''அந்தப் பழக்கத்தைக் கொஞ்சம் மாத்திக்கோயேன்.''

''அதெப்படி மாத்திக்க முடியும்?''

கோபமாகவும் திருத்தப் பார்த்தேன்.

''கேட்கிற கேள்விக்கு நேராகப் பதில் சொல்லாமல் ஏன் இப்படி எதிர்க் கேள்வி கேட்டு கழுத்தறுக்கிறே?''

''ஏன், கேட்டா என்ன?''

''உன்னை மாதிரி மத்தவங்க எல்லாத்துக்கும் எதிர்க் கேள்வி கேக்கறாங்களா?''

''மத்தவங்களைப் பத்தி என்ன பேச்சு? ஒருத்தர் மாதிரியே எல்லாரும் இருப்பாங்களா?''

''நீ இப்படி எதிர்க் கேள்வி கேக்கறது எனக்குப் பிடிக்கலை..''

''உங்களுக்குப் பிடிக்கலைன்னா நான் என்ன பண்ண முடியும்?''

''அந்த மாதிரி பேசறதை நிறுத்தலாமே.''

''நிறுத்த முடிஞ்சா நிறுத்தியிருக்க மாட்டேனா?''

'''சரி'ன்னு சொல்லித் தொலையேன்'' என்று கத்தினேன்.

''சரி.... போறுமா?'' என்று பதிலுக்குக் கத்தினாள்.

**எ**னக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. மனோதத்துவ டாக்டர் பக்கிரிசாமியை அணுகினேன்.

சதீப்ரா

''இது ஒரு விதமான மனோ வியாதி தான். குணப்படுத்தி விடலாம்'' என்றார் டாக்டர்.

''எவ்வளவு செலவானாலும் பரவா யில்லை டாக்டர். அவ வாயிலே இனிமே கேள்வியே வரக்கூடாது.''

''கவலைப்படாதீங்க. ஒரே வாரத்திலே சரி பண்ணிடறேன். அடுத்த வாரம் பாருங் களேன். நீங்களே ஆச்சரியப்பட்டுப் போவீங்க.''

''அவ வேலைக்குப் போகணும்னு ஆசைப்படறேன் டாக்டர். பி.ஏ. படிச் சிருக்கா. இந்த குணத்தாலேதான் அவ ளுக்கு எங்கேயும் வேலை கிடைக்கலை. இண்டர்வியூவிலே இவ கேக்கற கேள் விக்கு அவங்க பதில் சொல்ல வேண்டி யிருக்கு. எப்படி வேலை கிடைக்கும்?''

''நீங்க உங்க மனைவியை அழைச் கட்டு வாங்க. தினமும் அரை மணி நேரம் எப்படிப் பேசணும்னு அவங்களுக்குப் பேச்சுப் பயிற்சி கொடுக்கிறேன். அப்புறம் பாருங்க'' என்றார்.

டாக்டரின் பேச்சு நம்பிக்கையைத் தந்தது. ஹேமலதாவை மறுநாளே அவ ரிடம் அழைத்துச் சென்றேன்.

''எதுக்கு என்னை மனோதத்துவ டாக்டர் கிட்டே அழைச்சிட்டுப் போறீங்க? எனக்கென்ன பைத்தியமா?''

''சேச்சே! உனக்கு ஒண்ணும் இல்லை.''

''ஒண்ணும் இல்லாதப்போ எதுக்கு டாக்டரைப் பார்க்கணும்? உங்களுக்குப் பைத்தியமா?''

''ஐயோ! கொஞ்சம் பேசாம வாயேன்.''

''ஏன் இப்படிக் கத்தறீங்க?''

ஒருவழியாக டிஸ்பென்ஸரியை அடைந்தோம்.

''இவதான் டாக்டர், நான் சொன் னேனே, என் மனைவி.''

''ஓ... அந்தக் கேள்வி ஸ்பெஷ லிஸ்ட்?''

''ஆமா....''

''இதோ பாரும்மா! உன் பேர் என்ன?''

''எதுக்காக என் பேரைக் கேக்கறீங்க?''

''உஸ்.... கேக்கற கேள்விக்கு நேரடியா பதில் சொல்லணும். உன் பேர் என்ன?''

''என் பேரைத் தெரிஞ்சுக்கிட்டு நீங்க என்ன பண்ணப் போறீங்க?''

''சரி, அது வேண்டாம். நான் சொல்ற துக்கெல்லாம் 'உம்'னு பதில் சொல்லணும். வேறே எதுவும் சொல்லக் கூடாது.''

''உம்?''

டாக்டர் தலையைச் சொறிந்து கொண் டார்.

''இதோ பாரும்மா. நான் கேக்கற கேள் விக்குப் பதில்தான் சொல்லணும். கேள்விக் குறி வரக் கூடாது. என்ன?''

''ஏன், டாக்டர்?''

''ஏன்னு நான் அப்புறம் சொல்றேன். நாலும் நாலும் எவ்வளவு? ஒரே வார்த்தை யிலே பதில் சொல்லணும்.''

''எதுக்கு கேக்கறீங்க டாக்டர்?''

''உஸ்.... ஒரே வார்த்தையிலே பதில் சொல்லணும்.''

''எதுக்கு?''

'''எட்டு'ன்னு பதில் சொல்லத் தெரி யாதா?'' - கோபத்துடன் கத்தினார் டாக்டர்.

''பதிலைத் தெரிஞ்சு வெச்சுகிட்டே என்னைக் கேள்வி கேட்டா என்ன அர்த் தம்?'' என்று அமைதியாகச் சொன்னாள் ஹேமா.

டாக்டரைப் பார்க்கப் பாவமாக இருந் தது. ஆனால், டாக்டர் மனம் தளரவில்லை. தினமும் இப்படி அரை மணி நேரம் பயிற்சி கொடுத்தால், சரியாகிவிடும் என்று உறுதி யாகக் கூறினார்.

நானும் ஹேமாவை சமாதானப்படுத்தி தினமும் டிஸ்பென்ஸரிக்குப் பேச்சுப் பயிற் சிக்காக அனுப்பி வைத்தேன். ஆனால், ஒரு முன்னேற்றமும் தெரியவில்லை.

ஒன்றும் புரியாமல் மீண்டும் டாக்ட ரிடம் சென்றேன். டாக்டர் தலையைக் கூட வாராமல் பித்துப் பிடித்தவர் போல் நின்றிருந்தார்.

''என்ன டாக்டர்? ஏன் இப்படி இருக்கீங்க?''

''ஏன்? இப்படி இருந்தா என்ன?''

''வந்து... அந்த எதிர்க் கேள்வி கேட்கிற குணம்....''

''எதிர்க் கேள்வி கேட்டா என்ன?''

போச்சுடா! ஹேமலதாவைக் குணப் படுத்தப் போய், டாக்டருக்கும் அந்தக் கேள்வி வியாதி தொற்றிக் கொண்டு விட்டதே.

மிகுந்த கவலையுடனும் மன வருத்தத் துடனும் வீடு திரும்பினேன்.

'ஹேமலதாவிடம்தான் முன்னேற்றம் இல்லையென்றால் டாக்டருக்கும் இப்படி ஆக வேண்டுமா?' என்று நினைத்தபடியே வீட்டுக்குள் நுழைந்தேன்.

''என்னங்க, எனக்கு அப்பாயிண்ட் மெண்ட் ஆர்டர் வந்திருக்கே பார்க் கலையா....?'' என்றாள் ஹேமலதா.

தூக்கி வாரிப் போட்டது எனக்கு. இவள் 'கேள்வி ஞானத்துக்கு' எந்த ஆபீ ஸில் இடம் கொடுத்திருப்பார்கள் என்று என்னுள் கேள்வி குடைய,

''உன் கேள்வி ஞானத்தை மதிக்க யார் வேலை கொடுத்தாங்க....?'' என்றேன்.

''இன்கம்டாக்ஸ் ஆபீஸ்னு கவர்மேல முத்திரை குத்தியிருக்கே அதைக் கூட நீங்க பார்க்கலையா?'' என்று மடக்கினாள் கேள்வித் திலகம்.

## 18

*ஓரெழுத்தாலே உலகெங்கும்*
*தானாகி*
*ஈரெழுத்தாலே இசைந்தவராம்*
*- திருமந்திரம்.*

என்னை ஆழமாக, குற்றச்சாட்டுடன் பார்த்தார் அர்ஜுன். இந்த மாதிரி பார்வையெல்லாம் இவரிடம் இருக்கறதா என்று ஆச்சரியமாக இருந்தது. அப்படியே கோபத்தை உமிழும், ஒரு சதவிகிதம் கூட பரிவு, அன்பு போன்ற விஷயங்கள் இல்லாத வெறும் வெறுப்புப் பார்வை.

''ஃப்ளாட்டை? திருப்பி? கொடுத்துரணுமா? உங்கப்பன் வீட்டுச் சொத்தோ?''

''எங்க அப்பா கிட்ட பணம் இருந்தாலும் இந்த மாதிரியெல்லாம் வாங்க மாட்டார்.''

''உங்க அப்பா கிட்ட என்ன இருக்கு?'' என்றார் ஏளனமாக.

''இத பாருங்க, கம்மா கம்மா எங்கப்பாவைப் பற்றிப் பேசி அவமானப்படுத்தாதீங்க'' என்றேன்.

அர்ஜுன் உடனே கார்ட்லஸ் போன் எடுத்து வைத்துக் கொண்டு, பத்து எண்களை அதில் பரபரப்புடன் ஒத்தினார். கொஞ்ச நேரம் கழித்து ''ஹலோ! ஸார் நான்தான் அர்ஜுன் பேசறேன். உங்க டாட்டர் ரொம்ப சண்டை போடறா ஸார். எதுக்கெடுத்தாலும் ஆர்க்யு பண்றா. எதிர்காலத்துக்கு இருக்கட்டும்னு ஒரு ஃப்ளாட்ல இன்வெஸ்ட் பண்ணியிருக்கேன். இவளுக்கு அது கூடாதாம்.''

அப்பா, ஏன் என்று கேட்டிருக்கவேண்டும்.

''ஏன்னா எதிர் ஃப்ளாட்ல இருக்கற ஆளு, இவளை முறைக்கப் பார்ப்பானாம்'' சிரித்தார். ''அப்ஸர்ட் இல்லிண்டிட்?''

''பேசு'' என்று போனை தோளில் தேய்த்து, என் கையில் கொடுத்து, ''அப்பா!'' என்றார்.

இந்த மாதிரி அவசரப்படுத்தினால் என்ன சொல்வேன்? எப்படி என் கோணத்தை அவரிடம் எடுத்துச் சொல்வேன்?

''ரேகா, என்னம்மா இதெல்லாம்! வயசான காலத்தில எனக்கு இந்தனை ப்ராப்ளம் வரும்னு நான் எதிர்பார்க்கலம்மா. ஐ தாட் யு ஆர் வெரி ஹாப்பி. மாப்பிள்ளையும் நல்லவராத்தானே இருக்கார். ஃப்ளாட் வாங்கினா சந்தோஷப்பட வேண்டாமோ? எதுக்கு எடுத்தாலும் குற்றம் சொல்லாதேம்மா. அவருக்கு அப்புறம் அலுத்துப் போய்விடும்.''

நான் சந்துக்காகக் காத்திருந்து ''அலுத்துப் போய் என்னப்பா செய்வார்?''

இந்தக் கேள்விக்கு அப்பா தயாராக இல்லை. சற்றே திடுக்கிட்டு, ''என்ன செய்வாரா, உன்னைக் கொண்டு டில்லில விட்டுருவார்.''

''அதுக்கு முன்னால நானே வரேன்பா. இங்க எனக்கு சமாளிக்க முடியலை.''

''ஏன், ஏன்?''

''ஏனோ! நான் சொல்றதை யாரும் அனுதாபத்தோட கேட்காத வரைக்கும் சொந்த அப்பா, அம்மா கிட்ட கூட எனக்கு நியாயம் கிடைக்காது.''

''இத பாரு, நியாயம் கியாம்னு எல்லாம் பேசாதே, ரேகா. இப்ப என்ன ஆச்சு உனக்கு?''

''ஒண்ணும் ஆகலைப்பா, நான் சந்தோஷமா, சௌக்கியமா இருக்கேன்'' என்று அழுதேன்.

''ரேகா, பாரும்மா, கண்ணைத் துடைச்சுக்கோ, ப்ளீஸ் ரேகா!'' என்று அவர் கேட்டதெல்லாம் எனக்குச் சம்பிரதாயமான சொற்களாகத்தான் இருந்தன. யாரிடம் சொல்வேன், யார் எனக்கு உண்மையான நட்பு? எங்கே போய் முட்டிக் கொள்வேன்?

கண்ணைத் துடைத்துக் கொண்டு, ''நீங்க ஃப்ளாட் வாங்கறதில எனக்கு ரொம்ப சந்தோஷம்'' என்றேன்.

''சந்தோஷம் குரல்ல தெரியலையே!''

''என்ன பண்ணணும்? எகிறிக், குதிக்கணுமா?'' என்றேன் அவரை நிமிர்ந்து பார்த்து.

''ஆரம்பிச்சயா? எத்தனை முன்கோபம் உனக்கு?''



சுஜாதா

அறையில் இருந்த பத்திரிகைகளையெல்லாம் சரக் சரக் என்று புரட்டினேனே தவிர, மனதில் பதியவில்லை. என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ளவேண்டும், ஏதாவது செய்ய வேண்டும், யாராவது என்ன செய்ய வேண்டும் என்று சொல்ல மாட்டார்களா? கீதாஞ்சலிதான் எனக்கு இருப்பதற்குள் தேவலாம் என்று தோன்றியது. மிக்கி சங்கதி வேண்டாம். ஆனால் கீதாவைக் கேட்கலாம். நான் என்ன தப்புப் பண்ணுகிறேன்? ஏன் என் கோணத்தை ஒருவரும் பார்க்க மாட்டேன் என்கிறார்கள்? கீதாவை போன் போட்டு, வரவழைத்து, வெள்ளிக்கிழமை சாயங்காலம் கடற்கரைக்குப் போனோம்.

உற்சாகமான காற்று வீசியது. கரும்புச் சாறும் மசால் வடையும் சோளக் கொண்டையும் விற்றுக் கொண்டிருந்தார்கள். சிறுவர் சிறுமியர் உற்சாகமாக பல்ட்டி அடித்துக் கொண்டிருந்தார்கள். ஸோடியம் விளக்கு இரவைப் பகலாக ஆக்கியிருந்தது. பெட்டிப் பட்டங்கள் விற்றுக் கொண்டிருக்க, வழக்கம்போல் சுண்டல்காரர்கள் மொய்க்க, கீதா என் கதையைக் கேட்டாள்.

''நான் செஞ்சதில் எது தப்பு கீதா?''

''எதுவும் தப்பில்லை. நீ செய்தது எல்லாமே ரைட்டு, எல்லாமே, நீ கேட்ட கேள்விகள் எல்லாமே நியாயமானதுதான்.''

''அம்மா சோசியம் பாக்கிறீகளா சோசியம்'' என்று ஒரு மதுரைக்காரப் பெண் கையில் சின்ன கூச்சியுடன் வந்து அருகில் உட்கார்ந்து கொள்ள,

''வேண்டாம்மா'' என்றாள் கீதா. ''இருவத்தஞ்சு ரூபா, கொடு. ஆயுசு பூரா சொல்விர்றேன்'



**"சிக்கனம் என்பது ஒருவன் பணத்தை எவ்வளவு குறைவாகச் செலவிடுகிறான் என்பதைப் பொறுத்ததல்ல. அவன் அதை எவ்வளவு உபயோகமாகச் செலவிடுகிறான் என்பதேயாகும்."**

**- ஆரிலன் ஸ்வேட்**
**தக்கோலம் அ. முஸ்தபா**

---

''வேண்டாம்மா போம்மா.''

''பத்து ரூபா கொடு, ரேகை பார்த்துச் சொல்றேன்.''

''பத்து ரூபாயும் இல்லை, கொஞ்சம் எங்களைத் தனியாகப் பேசவிடும்மா.''

''அஞ்சு ரூபா கொடும்மா.''

''நீ சும்மா சொன்னாலும் சோசியம் வேண்டாம்'' என்றாள் கீதா.

நான் தான் கையைக் காட்டி, ''என்ன ஆகும் சொல்லும்மா?'' என்றேன்.

''ரேகா! இதெல்லாம் ஹம்பக்.''

அந்தப் பெண் என்னருகில் உட்கார்ந்து கொண்டு,

''ஓரெழுத்தாலே உலகெங்கும் தானாகி, ஈரெழுத்தாலே இசைந்சவராம். மூவெழுத் தாலே முளைக்கிற சோதியாம்'' என்று ராகம் போட்டுப் பாடிக் கொண்டு, ''உன் கஸ்ட மெல்லாம் தீரும். ஆயுக எம்பத்து அஞ்சு. உனக்கு ரெண்டு புள்ளைங்க, வைகாசி மாசம் உன் கஸ்டமெல்லாம் தீரும். இன்னம் பத்து ரூபா கொடுத்தா ஆயுக முளுக்கைக் கும் சொல்றேந் தாயி'' என்றாள்.

''நான்சென்ஸ்'' என்றாள் கீதா.

''புருசன் சரியில்லை. பரசகவாசம் வெச்சிருப்பான். பரதேசம் போய் பல வேசம் போட்டு பலதும் சம்பாரிக்கும், மன சில நெம்மதியில்லை. சனீச்கரன் கோவி லுக்கு நாப்பத்தெட்டு நாளு போய்ட்டுவா!''

''போய்ட்டுவா!'' என்றாள் கீதா அவ ளிடம் ஐந்து ரூபாயைக் கொடுத்து.

''சரியான சைக்காலஜி பண்றா. ரெண்டு பெண்கள் உட்கார்ந்து பேசிக்கிட்டு இருந்தா புருசன் சரியில்லைன்னுடுவா.''

''எப்படி அப்படி அக்யுரேட்டா சொல்றா?'' என்றேன்.

''பைத்தியம்! உன் புருசன் சரியில் லையா! நான்சென்ஸ் ஐ நோ அர்ஜுன், அவர் உன்னைப் பத்தி எத்தனை பெரு மையா ஆபீஸ்ல பேசறார் தெரியுமா? ரேகா, நீயா உன் கஷ்டங்களையெல்லாம் இமா ஜின் பண்ணிக்காதே. உனக்கு என்ன கஷ் டம்? வாட்ஸ் யுவர் ப்ராப்ளம் என்றே தெரிய லையே.''

''நீ இதை அர்ஜுன் கிட்ட சொல்லி டாதே.''

''எதை?''

''நாம ரெண்டு பேரும் பேசினதை.''

''ஒய் நாட்? அர்ஜுன் அதைச் சரியாத் தான் எடுத்துப்பார். நான் ஒண்ணு சொல் லட்டுமா? நீ டில்லில வளர்ந்தாலும் கொஞ் சம் பாதுகாப்பா வளர்ந்திருக்கே. அதனால உன் எண்ணங்கள்ளாம் சம்பிரதாயமா இருக் குது. அதனால் உன்னால மற்ற பேரை புரிஞ் சுக்கறது கஷ்டமா இருக்கு. காரணம் நீ மற்றவா நிறையப் பேரை பார்த்ததே இல்லை. ரேகா, கொஞ்ச நாளைக்கு நீங்க ரெண்டு பேரும் பிரிஞ்சு இருந்தா, சும்மா ரெண்டு நாள் மூணு நாள் கூட போதும், டில்லிக்குப் போக வேண்டாம். அவா தப்பா நெனைக்க பயந்துப்பாங்க. அதுக்குப் பதிலா பக்கத்தில, கிட்டத்தில யாராவது உறவுக்காரங்க இல்லையா?''

''எனக்கு இங்க யாரும் இல்லையே?''

''ஒரு மாறுதலுக்கு அர்ஜுன் சிஸ்டர் காயத்ரி கோவைல இருக்காங்களே, அவ கூட போய் ரெண்டு நாள் இருந்து பாரேன்.''

''எனக்கு அவாளத் தெரியாதே...''

''தெரிஞ்சுக்கோ. உன் நாத்தனார்தானே ஆஃபட்ர் ஆல்.''

நான் மௌனமாக இருக்க, அவள் ''நானே எல்லா ஏற்பாடும் செய்கிறேன், கவலையை விடு. அர்ஜுன் உன்னை மிஸ் பண்ணணும். எப்ப திரும்பி வந்தாலும் நீ வீட்டில இருக்கறப்ப யு ஆர் டேக்கன் ஃபர் க்ராண்டெட், என்ன! கோவை போன உடனே உன்னைத் தேடிண்டு வந்துருவார் பாரு.''

''இந்த ப்ளானை அவர் கிட்ட சொல் லாதே'' என்றேன் உற்சாகமாக.

''சொல்ல மாட்டேன். ரகசியமாக வச்சுக்கலாம். டிக்கெட் எல்லாம் வாங்கிட றேன்.''

''எங்க போகப் போறே?'' என்றார் ஆச்சரியத்துடன்.

''கோவை.''

''அங்க யார் இருக்கா? உனக்கு?''

''ஏன், உங்க சிஸ்டர் இல்லையா?''

''யு மீன் காயத்ரி? யூ ஆர் கோயிங் டு காயத்ரிஸ் ஹவுஸ்?''

''ஏன் போகக் கூடாதோ?''

அவருக்கு ஆச்சரியம் தெளிவாகத் தெரிந்தது. ''இஸ் இஸ் நைஸ்! திஸ் இஸ் நைஸ்! லவ்லி. காயத்ரி ரொம்ப சந்தோஷப் படுவா. இப்படித்தான் இருக்கணும். யு ஆர் மை ஒய்ஃப்'' என்று பின்னால் தட்டி னார்.

## தாவண்கெரே அளிக்கும்



உங்கள் குடும்பத்திற்குத் தேவையான இரவிக்கை • பள்ளிச்சீருடைகள்





• சூட்டிங்குகள் • ஷர்ட்டிங்குகள்

• வேட்டிகள் • படுக்கை விரிப்புகள்

• துவாலைகள் - பருத்தி மற்றும்

பாலியெஸ்டர் ப்ளெண்ட்களில்





## தாவண்கெரே

– என்றும்

ஃபேஷனுக்காகவே



ஃபேஷன்

பேப்ரிக்ஸ்



தாவண்கெரே காட்டன் மில்ஸ்,
தாவண்கெரே - 577 002
(A division of the Morarjee Goculdas Spinning & Weaving Company Ltd., Bombay)

---

மே '94

மலர்

# மல்லிகை




## புதுப் பொலிவுடன் பூக்கிறது...

பொறுப்பாசிரியர்:

**சுஜாதா ரங்கராஜன்**

* பெண்களிடம் வம்பு
  —கவர் ஸ்டோரி
* சிறப்புச் சிறுகதை,
  பேட்டி: திலகவதி
* ஆண்களே எச்சரிக்கை!
* கர்ப்பப் பையை
  மாற்ற முடியுமா?
  – மருத்துவம்
* சேலை
  – ஃபாஷன்
* செக்ஸைப் பற்றி
  கற்றுக் கொடுங்கள்!
  – ஆலோசனை
* குமுதம் ஆசிரியருக்கு அஞ்சலி
* இன்னும் பல அம்சங்களுடன்

---

விவரங்களுக்கு:
சர்குலேஷன் மானேஜர்,
151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை–600 010

''ஆமாண்டிம்மா நீ நம்மாத்துப் பொண்ணில்லையா, நம்மாத்து மனுஷாளோட ஒட்ட வேண்டியது கட்டாயம் இல்லையா!'' என்றார் ப்ரேமா மாமியார்.

''கொஞ்ச நாளைக்கு இங்கயும் நிம்மதியா...'' என்று ஆரம்பித்த மாமனாரை ''கம்மாருங்கோ'' என்று அதட்டினார்.

''நான் கிதா கிட்ட சொல்லி டிக்கெட்டுக்கு ஏற்பாடு பண்ணச் சொல்றேன்'' என்றார் அர்ஜுன்.

''திஸ் இஸ் அன்பிலீவபிள். நிஜமா ரேகா மாறிட்டா'' என்றார்.

''நானும்தான் வரணும். எங்க? ஆபிஸ்ல பிஸி பிஸி. நீ என் பிரதிநிதியா போய்ட்டு வந்தா, காயத்ரியும் அத்தியும் என்ன சந்தோஷப்படுவா தெரியுமா?'' என்றார்.

**ரா**த்திரி கிளம்பிய நீலகிரி எக்ஸ்பிரஸில் என்னை ரயிலேற்றினார். ப்ளாட்பாரத்திலிருந்து சன்னல் வழியே என் கையைப் பிடித்துக் கொண்டு, விடவில்லை. கிதா சொன்னது சரிதான். பிரிவு என்பது கொஞ்சம் வித்தியாசமான விஷயங்கள் செய்கிறது.

என் கையைப் பிடித்துக் கொண்டு ''உன்னைவிட்டு எப்படி ஒரு வாரம் இருப்பேன்? மலைப்பா இருக்கு ரேகா. வீட்டுக்கு வந்தா சண்டை போட ஆள் இல்லைன்னா எப்படி?'' என்றார்.

நான் சிரித்தேன். ப்ளாட்பாரத்தில் பூ விற்றது. வாங்கிக் கொடுத்தார். ஃபெமினா, உமன்ஸ் இரா வாங்கிக் கொடுத்தார். போனவுடன் போன் பேசச் சொன்னார்.

இந்த மினி பிரிவு ஒரு ஒற்றுமையைக் கொண்டுவரும் என்பது சட்டென்று புரிந்தது. இந்த யோசனையைச் சொன்ன கிதாவைப் பாராட்ட வேண்டும். யோசித்துப் பார்த்தால் சில மனிதர்களின் சில குறைகளை மறந்து விட்டால் நிறைய நல்ல குணங்கள் எல்லாரிடமும் இருக்கின்றன.

ஒரு இருபது சதவிகிதம் கெட்டது இருக்கத்தான் செய்யும். ஏன்? என்னிடம் கெட்ட குணம் இல்லையா? எதற்காக பிடிவாதம்? நாங்கள் போட்ட ஒவ்வொரு சண்டையையும் யோசித்துப் பார்த்தால், என்னால் தவிர்த்திருக்க முடியும்.

கணவன் மனைவிக்குள் பரஸ்பர நம்பிக்கையும் பாசமும் இருந்து விட்டால் மற்றதெல்லாம் சமாளிக்கலாம்.

**கா**லை ஆறுமணிக்கு ஸ்டேஷனுக்கு காயத்ரி வந்திருந்தாள். அவள் கையில் அவள் பையன் சுரேஷ். பக்கத்தில் கணவர்.

''வெல்கம் டு கோவை. பேப்பர்ல போட வேண்டிய சமாசாரம்'' என்றார் உற்சாகமாக.

அந்த அதிகாலையிலும் இருவரும் குளித்திருந்தார்கள். என் பெட்டியைத் தூக்க விடாமல் நலுங்காமல் அழைத்துப் போனார்கள்.

அம்பாஸிடர் காரின் உள்ளே அலங்காரங்கள் பலமாக இருக்க, இன்ஜினை ரிவர்ஸ் பண்ணும் போது குழந்தை அழும் சப்தம் கேட்டது.

''ரேகாவுக்குன்னு ஸ்பெஷலா இதைப் பொருத்தினேன்!'' என்றார்.

''எல்லாமே இவருக்கு தமாஷ்தான்'' என்றாள் காயத்ரி.

காயத்ரிக்கு அர்ஜுனின் சாயல் இல்லை. பேச்சிலும் சில அசைவுகளிலும் அர்ஜுனின் சகோதரி என்று சொல்ல முடிந்தது. அந்தப் பையன் என்மேல் ஒட்டிக் கொண்டு, ''போற்றி அகவல் சொல்லு பார்க்கலாம்'' என்று வழி முழுவதும் தமிழ்ப் பாட்டாகவே சொல்லிக் கொண்டு வந்தான். ஒட்டகத்தைக் கட்டிக்கோவும் இருந்தது.

காயத்ரி வீட்டில் காலடி வைத்த போது தான் எனக்கு என் வாழ்க்கை சீராக அமையப் போகிறது என்கிற நம்பிக்கை பிறந்தது. காயத்ரியிடம் அர்ஜுனைப் பற்றி எல்லாம் கேட்டுக் கொள்ள வேண்டும்.

(தொடரும்)







- ஏ. வி. கிரி

# எம்.ஜி.ஆர். சிலையைப் பறிமுதல் செய்தது குறித்து?

● ஜூசை அருளானந்தம், காரைக்கால்.

? கிரிக்கெட்டில் வெற்றிக்கு எது மூலதனம்?

! ஆற்றல் + அதிர்ஷ்டம். நம்மவருக்கு இரண்டும் கூடி வருவது அபூர்வம். இல்லாவிட்டால் ஷார்ஜா ஆட்டம் அட்டைப்படக் கட்டுரையாக வராமல் நீங்கள் கேட்டவை பகுதிக்குத் தள்ளப்பட்டிருக்குமா? எப்படியோ ஃபைனல்ஸ் வரைக்குமாவது வந்தார்களே, அதற்கு ஒரு வாழ்த்து!

● வி.பி. மகராசி, மதுரை.

? அரசு மருத்துவ மனைகளில் கட்டண வார்டு ஏற்படுத்தப்படுமாமே?

! இப்போது சில்லறை வெட்டுகிறோம். இனி அது தவிர மொத்தமாகவும் வெட்ட வேண்டும்.

● மூ. பாலகுமாரன், திருவில்லிபுத்தூர்.

? ஒரு பத்திரிகையின் வெற்றி, பணி புரிபவர்களின் செயல் திறனிலா? வாசகர்கள் அளிக்கும் வரவேற்பிலா?

! நெய்க்குத் தொன்னை ஆதாரமா? தொன்னைக்கு நெய் ஆதாரமா?

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

? 'நினைத்திருந்தால் அண்ணா அறிவாலயத்தையே அடித்து நொறுக்கியிருப்பேன்' என்கிறாரே முதல்வர் ஜெ...?

! அப்படி ஓர் ஆசையும் அவருக்கு இருப்பது அம்பலமாகி விட்டது!

● சி. சரவணன், திருத்துறைப்பூண்டி.

? முதல்வர் பெயரில் எப்போது மாநிலம் அழைக்கப்பெறும்?

! அடுத்த முறை ஜெயித்து வந்தால் அந்தத் துணிவும் ஏற்பட்டுப் போகும்!

● ஆர். சாவித்திரி, முருங்கப்பேட்டை.

? அனைவரையும் ஏப்ரல் முட்டாளாக்கத் தாம் விட்ட புருடாதான் தமக்கு ரத்தப் புற்று நோய் என்று கூறியது என வி.பி. சிங் விளக்கியுள்ளாரே?

! தராசு உள்பட பலரும் முட்டாளாக்கப் பட்டோம் என்பது ஒருபுறமிருக்க, வி.பி. சிங் போன்ற பெருந் தலைவரிடம் இந்தச் சிறுபிள்ளைத்தனத்தை எதிர் பார்க்கவில்லை என்பதையும் சொல்ல வேண்டும்.

● எம். வெங்கடேஷ், திருநெல்வேலி.

? அந்த 'லெ மாண்ட்' பிரெஞ்சுப் பத்திரிகையில் 'ஜெ' பற்றி அப்படி என்னதான் எழுதியிருக்கிறது? மொழி பெயர்த்து எழுதக் கூடாதா?

! நாகரிகம் கருதி அதைத் தவிர்க்கிறோம். கண்டிப்பாகப் படித்தே ஆக வேண்டுமானால் சென்னை பிரிட்டிஷ் கவுன்சில் நூலகத்தில், 'கார்டியன்' பத்திரிகையின் அயல் நாட்டுப் பதிப்புக் கோப்பைப் புரட்டுங்கள். அதில் 'லெ மாண்ட்' என்ற பிரெஞ்சுப் பத்திரிகையின் பகுதிகளும் உள்ளடக்கம் - ஆங்கில மொழி பெயர்ப்பில். 'ஜெ' படம் பளிச்சென்று தெரியும் போது, நின்று நிதானித்துப் படியுங்கள்.

● எஸ். பெரியசாமி, கூகூர்.

? கல்கி 17.4.94 இதழ் விடுமுறைச் சிறப்பிதழா, விளம்பரச் சிறப்பிதழா? 112 பக்கங்களில் 31 பக்கம் விளம்பரத்தைக் கொடுத்திருக்கிறீரே?

! அந்த 31 பக்கம் இல்லை என்றால் 112 பக்கம் மூன்று ரூபாய் விலைக்குத் தந்திருக்க முடியாதே! ஆறு ரூபாய் விலை வைத்திருக்க வேண்டுமே. ஆக 81 படிக்கும் பக்கங்களை வழக்கமான மூன்று ரூபாய் விலைக்கே பெற முடிந்ததற்கு விளம்பரம் தந்த மகானுபாவர்களுக்கு நன்றி சொல்லுங்கள்.

● சி. சீனிவாசன், திருத்துறைப்பூண்டி.

? கலைஞரின் சமூக நீதிப் பேரணி, வை. கோவின் எழுச்சிப் பேரணி - ஒப்பிடுக.

! அது வம்புக்காக, இது வீம்புக்காக.

● கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

? 'லண்டனிலுள்ள மேடம் டு ஸோஸ் கண்காட்சியில் 'ஜெ'யின் மெழுகுச் சிலை வைக்க வேண்டும்' என்று ஜனகல்யாண் இயக்கச் செயலர் கோரிக்கை விடுத்துள்ளாரே?

! அவர் கோரிக்கை ஏற்கப்படுவது அரிது என்பது ஒருபுறமிருக்க, அங்கே மெழுகுச்



● சிலை திறக்கத் தடை!



● சிலையாக நிற்கத் தடை!

சிலையாக இருப்பவர்கள் நல்லவர்கள் மட்டுமல்ல, உலகப் புகழ் பெற்ற பொல்லாதவர்களுக்கும் கண்காட்சியில் இடமுண்டு! ஜனகல்யாண் இயக்கச் செயலர் எந்த அர்த்தத்தில் சொன்னாரோ!



✱ சமூக நீதிப் பேரணி

● எஸ். அழகர் ராஜா, சென்னை.

? 'குற்றங்கள் ஆதாம்-ஏவாள் காலத்திலிருந்தே நடந்து வருகிறது!' என்று அ.தி. மு.க.வினர் சட்ட சபையில் சமாளிப்பது பற்றி....?

! 'ஆதாம்-ஏவாள் காலத்தில் அரசாங்கம் இருந்ததா? முதலமைச்சர் தலைமையில் போலீஸ் துறை இருந்ததா? அதற்குக் கோடிக்கணக்கில் மக்கள் பணம் செலவாயிற்றா?' என்றெல்லாம் திருப்பிக் கேட்கும் திறன் மக்களிடம் இல்லாத போது இதுவும் பேசுவார்கள்; இன்னமும் பேசுவார்கள்!

● கே. ராமசுப்பிரமணியம், சென்னை.

? சில தண்ணீர்ப் பந்தல்களில் ஆளும் கட்சிக் கொடியும் தலைவியின் கட்-அவுட்டும் இருந்தாலும் பானையில் தண்ணீரே இல்லையே?

! ஒருவேளை தலைவியின் தருநிக்கு, லெவன்-அப், லிம்கா, தம்ஸ்அப், கோல்ட் ஸ்பாட் என்றுதான் தரவேண்டும் என்று காத்திருக்கிறார்களோ என்னமோ!

● அப்துல் சலாம், திருச்சி.

? 'ஜெயலலிதா பொற்கால ஆட்சி நடத்துகிறார்?' என்று சட்ட சபையில் இ.காங்கிரஸ் எம்.எல்.ஏ. ஜீனத் சர்புதீன் பாராட்டி விருப்பது எதைக் காட்டுகிறது?

! யாருக்குப் பொற்காலமோ இல்லையோ 'ஜெ' காங்கிரஸ"க்கு நிச்சயம் பொற்காலம் என்பதைத்தான்!

✱ அப்படி ஓர் ஆசை!



✱ சிறுபிள்ளைத்தனம்!



● தெ.க. திலீபன், வத்ராயிருப்பு.

? குஜராத்தில் சபில்தாஸ் மேத்தா தலைமையில் புதிய அமைச்சரவை பதவி ஏற்றது பற்றி?

! நித்திய கண்டத்துக்கு உள்கட்சிப் பூசல் நிச்சயம் வழி வகுக்கும்; பூரண ஆயுசா, தெரியாது!

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? ஜெயலலிதா திறந்த வெளி பல்கலைக் கழகம் அமைக்க இருப்பது வரவேற்கத் தக்கதா?

! இன்று தமிழ் நாடு முழுவதுமே ஒரு திறந்த வெளி பல்கொலைக் கழகமாகி வருகிறது. முதலில் இதைச் சரி செய்யட்டும். அப்புறம் பார்க்கலாம்.



✱ எழுச்சிப் பேரணி

● பாலசுப்பிரமணியன், செங்குன்றம்.

? ஈரோட்டில் மூப்பனாரை வைத்து எம்.ஜி. ஆர். சிலை திறக்க முயற்சித்ததும் அதனை போலீஸ் மூலம் தடுத்து எம்.ஜி.ஆர். சிலையைப் பறிமுதல் செய்தது குறித்தும்......?

! ஆட்சியில் இருப்பவர்களின் அற்ப புத்தியைக் காட்டுகிறது. சிலை வைக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் சரியில்லை என்றால் ஒரு நல்ல இடத்தை அரசே சுட்டிக்காட்டி ஒத்துழைத்திருக்கலாம். மேலும் மூலைக்கு மூலை 'ஜெ' கட்-அவுட் வைத்துக் கழுத்தறுப்பதைக் கண்டு கொள்ளா திருக்கும் அரசு, இதற்கு மட்டும் தடை விதிக்கத் தகுதி இழந்ததாகிறது.

● ச. ஜான் ரவி, கோவில்பட்டி ❑

? எழுச்சிப் பேரணி நடத்த ஒவ்வொரு தலைவருக்கும் எப்படி கோடி கோடியாகப் பணம் கிடைக்கிறது?

! அந்த அளவுக்கு லஞ்ச ஊழல் விளையாடுகிறது. ஜனநாயகம் பண நாயகமாகி விட்டது என்று அர்த்தம். இதை மக்கள் புரிந்து கொண்டு, இதைத் திருத்தி அமைக்கும் நோக்கில் செயல் பட்டால் தானே? பேரணி, தேர்தல் என்றெல்லாம் நடந்தால் ஏதோ நமக்கும் கொஞ்சம் கிடைக்கிறதே என்று அப்பாவித் தனமாகத் திருப்தி அடைந்து விடுகிறார்கள், பாவம்!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ச. ஜான் ரவி,
38, தெற்கு - வடக்கு சந்து,
தனுஷ்கோடியாபுரம் புதுத் தெரு,
கோவில்பட்டி - 627 701.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 78. இலங்கையில் கவலை

இனி ராவணனிடம் போவோம். மகா கவிகளின் போக்கில் ஒரு தனிச் சிறப்பு உண்டு. தங்களுடைய கற்பனா சக்தியைச் செலுத்தி வெறுக்க வேண்டிய பாத்திரங்களையும் இயற்கை நியதிகளைப் புறக்கணிக்காமல் உணர்ச்சியுடன் சித்திரிப்பார்கள். குணங்களையும் சாமர்த்தியத்தையும் தாழ்த்திவிட்டுச் சித்திரிக்க மாட்டார்கள்.

மக்களின் மனப்பான்மையை சாத்துவீக மார்க்கத்தில் செலுத்துவதே கவிகளின் கருத்து. இதற்காகவே தான் ராஜஸ தாமஸ பாத்திரங்களையும் மிகத் திறமையாகக் கையாள்வார்கள். ராஜஸ தாமஸ குணங்கள் பொதிந்து கிடக்கும் சாதாரண மக்களுக்கு காவ்யம் படிக்கும் போது ராஜஸ தாமஸ பாத்திரங்களிடம் அனுதாபமே ஏற்படும். கீழ்த்தர மக்களைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. சாத்துவீக பாத்திரங்களின் செயல்களை வெறும் கதையாகவும் பூஜை விஷயமாகவும் வைத்து விட்டு, ராஜஸ தாமஸ பாத்திரங்களைத் தங்கள் உறவினர்களாகவே பாவித்து, அனுதாபத்தோடும் அக்கறையோடும் படித்து அநுபவிப்பார்கள்.

மில்டன் என்னும் ஆங்கில மகா கவி ''சுவர்க்கம் இழந்த'' கிறிஸ்துவப் புராணத்தை ஒரு பெருங் காவியமாகப் பாடியிருக்கிறார். அந்த காவியத்தின் புகழ் உலகம் அளாவிப் பரந்தது. அதில் ஆண்டவன், ஆண்டவனுடைய மானஸ புத்திரனும் மக்களுக்குப் புருஷகாரனுமான கடவுள் திருமகன்* நித்திய சூரிகள் எல்லாரும் பாத்திரங்களாக வருகிறார்கள். கடவுளை முதல் முதலில் எதிர்த்துப் பாபத்தையும் மரணத்தையும் பிரபஞ்சத்தில் உற்பவம் செய்த சைத்தான் அந்தப் பெருங் காவியத்தில் முக்கியமான பாத்திரம். இந்த சைத்தானை மில்டன் அற்புத அழகுடன் சித்திரித்திருப்பதாக ஆங்கில காவ்ய ரசிகர்கள் புகழ்வார்கள். அப்படியே உலகப் பிரசித்தரான நாடகக் கவிஞன் ஷேக்ஸ்




* நம்முடைய சமயங்களில் எப்படி தேவி புருஷகாரமோ அதாவது, கருணைக்கென்று மூர்த்தியோ அப்படியே கிறிஸ்து மதத்தில் புருஷகாரம் கடவுள் திருமகனான ஏசுநாதர்.

பியரும். ஷைலாக் என்கிற லோபி, அதிக வட்டிக்குக் கடன் கொடுத்து மக்கள் ரத்தத்தை உறிஞ்சும் ஒரு பாத்திரம். அவனை ஷேக்ஸ்பியர் மிக அழகாகச் சித்திரித்திருக்கிறார். பெரும் துர்க் குணங்களை வைத்துக் கற்பித்த பாத்திரங்களானாலும் கெட்ட குணங்களுடன் தைரியம், உறுதி, சாமர்த்தியம் இத்தகைய உயர்ந்த குணங்களையும் அழுக்குக்குப் பின்னிருந்து மிளிரும்படி மனத்தைக் கவரும் வகையில் சேர்த்தே கவிகள் நமக்குச் சித்திரித்துக் காட்டுவார்கள். பாமர மக்களாகிய நமக்கு அந்தப் பாத்திரங்களிலின்று அடைய வேண்டிய அறிவு ரொம்பவும் இருக்கிறபடியால் நம்முடைய கவனத்தை இழுக்கும்படி அந்தப் பாத்திரங்களின் சித்திரத்தில் மிகுந்த ஒளி புகுத்தியே அமைப்பார்கள். வால்மீகி மகா காவியத்திலும் ராவண கும்பகர்ண சித்திரங்களில் இதைப் பார்க்கலாம். உணவுப் பதார்த்தங்களில் கசப்பிலும் மிக ருசி உண்டு அல்லவா? அத்தகைய பண்டங்களை நன்றாகச் சமைப்பதே சாமர்த்தியம். அதைப் போலவே காவியத்திலும்.

ஹனுமான் லங்கையில் செய்த வீரச் செயல்களும் நாச காரியங்களும் ராக்ஷச ராஜனுக்கு ஓரளவு வெட்கம் உண்டாக்கின. பயமும் ஏற்பட்டது. ஆனபடியால் சபை கூட்டி மந்திராலோசனை செய்தான்.

ஹனுமான் செய்த காரியங்களைப் பற்றிக் கொஞ்சம் அவமானப்பட்டுத் தலை குனிந்தே பேசினான்.

"இதுவரையில் பகைவர் யாரும் நம்முடைய நகரத்துக்குள்ளே புகுந்து பார்த்ததில்லை. ராமனிடமிருந்து வந்த இந்த வானரன் லங்கைக்குள் பிரவேசித்து, சிறையிலிருக்கும் ஜானகியையும் பார்த்து விட்டுப் போய்விட்டான். மாட மாளிகைகளை அழித்தான். சிறந்த வீரர்களைக் கொன்றான். நம்முடைய பிரஜைகளைப் பயத்தால் நடுங்கவும் செய்து விட்டான். இந்த விஷயம் இத்துடன் நிற்காது. ஆகையால் மேல் நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றி நாம் ஆலோசிக்க வேண்டும்.

"மங்களம்! அரசனுடைய நன்மையைக் கோரும் மந்திரிகளுடன் ஆலோசித்தே எல்லா காரியங்களையும் அரசன் செய்ய வேண்டுமல்லவா? ஆதலால் இந்த சபை கூட்டினேன். நமக்கு ராமன் பகைவனாகி விட்டான். அவனைப் பற்றி என்ன செய்யலாம் என்பதை நன்றாய் யோசிக்க வேண்டும். அரசன் தன் சாமர்த்தியம் தன் புத்தி இவற்றையே நம்பிக் காரியங்களைச் செய்து கொண்டு போவதைக் காட்டிலும் தன்னுடைய நன்மையில் பங்கும் பற்றும் கொண்ட புத்திமான்களுடன் யோசித்துக் காரியங்களைச் செய்வதே நன்மை தரும். மந்திரிகளுடைய யோசனையையும் இயற்கை விதிகளையும் புறக்கணித்து விட்டுக் காரியங்களைச் செய்து கொண்டு போகும் அரசன் கெட்டுப் போவான். மந்திரிகளிலும் நீதி சாஸ்திரத்தைக் கவனித்து உறுதியான கொள்கைகளை அனுசரித்துத் தைரியமாக யோசனை சொல்கிறவர்கள் உத்தமமான மந்திரிகள் ஆவார்கள். தங்கள் புத்தியை நேர் வழியில் செலுத்தாமலும் உறுதியான முடிவுகளுக்கு வராமலும் இப்படியும் அப்படியும் பேசுபவர்கள் உதவாத மந்திரிகளாவார்கள்.

"இப்போது நம்முன் நிற்கும் விஷயம் மிகவும் முக்கியமானது. ராமனும் பலவான். அவன் படையும் பலங் கொண்டது. இவர்கள் லங்கையைத் தாக்குவது நிச்சயம். சமுத்திரத்தை ஏதோ யுக்தி செய்து கடந்து வருவார்கள் என்பது நிச்சயம். அந்த அரண் ஒன்றையே நாம் நம்பிச் சும்மா இருத்தல் சரியாகாது. நம்முடைய நகரத்தையும் சேனையையும் எப்படி பலப்படுத்திக் காப்பது என்பதையும் நம்முடைய க்ஷேமத்துக்காக என்னவெல்லாம் செய்ய வேண்டுமென்பதையும் நன்றாக யோசனை செய்து சொல்லுவீர்களாக" என்றான் ராக்ஷச மன்னன்.

அரசன் சொன்னதைக் கேட்ட சபையோர் அனைவரும் ஒரே அபிப்பிராயமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

"மகாராஜா! நம்முடைய சேனாபலமும் ஆயுத பலமும் பிரபஞ்சத்தில் நிகரற்றதாக இருக்கத் தாங்கள் ஏன் கவலைப்

படுகிறீர்கள்? எந்தப் பகைவன் இந்தக் கோட்டையையாவது தங்களுடைய சேனையையாவது எதிர்த்து வெற்றி பெற முடியும்? தங்களுடைய பலம் பகைவர்களுக்குத் தெரியாதா?

''போகவதீ நகரம் சென்று நாக ராஜனை எதிர்த்துத் தாங்கள் வெற்றி பெறவில்லையா? மகா பலவானான குபேரனையும் அவனுடைய யக்ஷர்களையும் தாக்கித் தோற்கடித்துப் புஷ்பக விமானத்தையும் லங்கையையும் தாங்கள் வெற்றியுடன் அடையவில்லையா?

''மயன் தங்களுக்குப் பயந்து நட்பு செய்து கொண்டு, தன் மகளையே தங்களுக்குத் தந்து விவாகம் செய்து கொடுத்தான் அல்லவா? பாதாளத்தில் எத்தனையோ நகரங்களைத் தாங்கள் தாக்கி வெற்றி பெற்றிருக்கிறீர்கள். காலகேயர்களோடு யுத்தம் செய்து வெற்றி பெற்றீர்கள். தங்களுடைய பல பராக்கிரமத்திற்கு எல்லையேயில்லை. வருணனுடைய புத்திரர்களையும் யமனையுங் கூட அபயம் கேட்கச் செய்தீர்கள். இந்த ராமன் எம்மாத்திரம்? வீரன் இந்திரஜித்து ஒருவன் போதாதா இந்த ராமனையும் அவன் வானர சேனையையும் அழிக்க? இந்திரனையே பிடித்து வந்து சிறையில் வைத்து அடக்கி, 'ஓடிப்போ' என்று சொல்லித் திருப்பி அனுப்பவில்லையா? இந்த ராமனும் அவனுடைய வானரர்களும் எம்மாத்திரம்? இந்திரஜித்தை அனுப்பி இந்த வானர சேனையை அழித்து விட்டு வர உத்தரவு கொடுத்தீர்களானால் காரியம் முடிந்தது. ஏன் கவலைப்படுகிறீர்கள்?''

இவ்வாறு சொல்லித் தங்கள் அரசனைப் புகழ்ந்தார்கள்.

**ம**கா சூரன், பெரிய கருத்த மேகம் போன்ற சேனாபதி பிரஹஸ்தன் எழுந்தான்.

''தேவ தானவ கந்தர்வர்களையெல்லாம் யுத்தம் செய்து அடக்கின மன்னனாகிய தாங்கள் இந்த அற்ப மனிதனைப் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்?

''வானரம் ஒன்று வந்தபோது நாம் அஜாக்கிரதையாக இருந்து ஏமாந்தோம். நம்முடைய அஜாக்கிரதையை உபயோகித்துக் கொண்டு ஹனுமான் துஷ்டத்தனம் செய்தான். அது மறுபடியும் நடக்க விடுவோமா? இங்கே அவன் மறுபடி வந்தால் அவனை நான் பார்த்துக் கொள்கிறேன். இந்த வானர ஜாதியையே நிர்மூலம் செய்து விடுவேன். உத்தரவு கொடுங்கள். தாங்கள் செய்து விட்ட ஒரு தவற்றின் பயனாக அபாயம் வந்து விட்டது என்று கவலைப்பட வேண்டியதில்லை'' என்றான்.

**அ**டுத்தாற்போல் துர்முகன் மிகக் கோபத்தோடு எழுந்தான். ''நம்மையெல்லாம் அவமதித்த அந்த வானரனை நாம் இனி விட முடியாது. நான் இந்தக் கணமே சென்று அந்த வானர சேனையை அடியோடு அழித்து விட்டுத் திரும்பி வருகிறேன்'' என்று கர்ஜித்தான்.

**வ**ஜ்ரதம்ஷ்டிரன் என்கிற சூரன் பயங்கரமான உலக்கையை எடுத்துக் கொண்டு நின்றான். ''இதோ இந்த உலக்கை, பகைவர்களுடைய ரத்தமும் மாமிசமும் கழுவாமல் பூசிக் கிடக்கிறது. குரங்கைப் பற்றி ஏன் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? ராமனும் லக்ஷ்மணனும் அல்லவா நம்முடைய பகைவர்கள்? அவர்களை நான் வதம் செய்து அந்த வானர சேனையையும் அழித்து விட்டுத் திரும்புகிறேன். என்னை அனுப்புவீர்களாக!

''நான் ஒரு யோசனை சொல்லுகிறேன். கேட்பீர்களாக. சில ராக்ஷச சூரர்களை மானுட வேஷம் தரித்து, ராமனிடம் போகச் சொல்வோம். போய், 'பரதன் நம்மை உம்மிடம் அனுப்பினான். பெருஞ் சேனை பின்னால் வருகிறது' என்று சொல்லி ஏமாற்றி அவனையும் அவனுடைய சேனையையும் அஜாக்கிரதையாக இருக்கச் செய்து நம் ராக்ஷஸ சேனை ஆகாய மார்க்கமாகச் சென்று அவர்கள் அனைவரையும் அக்கரையிலேயே வதம் செய்து விடலாம். இது என்னுடைய யோசனை'' என்றான்.

கும்பகர்ணனுடைய குமாரன் நிகும்பன் எழுந்து ''நீங்கள் அனைவரும் இவ்விடமே அரசனுடன் இருங்கள். நான் போய் இந்த சத்ருக் கூட்டத்தைக் கொன்று விட்டுத் திரும்பி வந்து உங்களுக்குச் சமாசாரம் சொல்லுகிறேன்'' என்றான்.

மற்றொரு அரக்கன் உதட்டை நக்கிக் கொண்டு எழுந்து ''நான் ஒருவனே சென்று இந்த ராம லக்ஷ்மணர்களைக் கொன்று தின்று விட்டு வருகிறேன்'' என்றான்.

(தொடரும்)

''டிரைவரை அனுப்பிப் பகல் பார்க் மார்க்கட்லே புதுசா காய்வாங்கிட்டு வரச் சொல்லுங்க. அப்படியே ஊத்துக்குளி வெண்ணெய் அரைக் கிலோ, முந்திரி, திராட்சை, ஏலக்காய் வேணும். உங்கம்மா வுக்கு அன்னாசிப்பழ புட்டிங் பிடிக்கும். அரை டஜன் வாங்கிட்டு வரச் சொல்லுங்க.''

கண்மணி சமையலறையிலிருந்து குரல் கொடுத்தாள். பண்புச் செல்வன் அலட்சிய மாக இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களை நீட்டினார்.

''எங்களுக்கு எதுக்குப்பா புட்டிங்கும் டின்னரும். கத்திரிக்காய், தக்காளி அரிஞ்சி கொளம்பு வைச்சி, பூண்டு ரசம் செஞ்சாப் போதும். ஏம்பா வீண் செலவு...'' அண்ணன் தடுத்தார்.

''என்னண்ணே அப்பிடிச் சொல்லிட் டீங்க. எத்தனை நாள் கழிச்சி வந்திருக்கீங்க. என்னாலேதான் ஊருக்கு வரமுடிறதில்லே. அம்மாவை இங்கே இருன்னு சொன்னா கேட்கமாட்டேன்கறாங்க. உங்க கூட கிரா மத்திலேயே இருக்கணும்கறாங்க. உங்க ளுக்கு ஆசை தீரச் சமைச்சுப் போடணும்னு கண்மணிக்கு எத்தனை ஆசை தெரியுமா?''

தம்பியின் பேச்சில் அண்ணன் மனம் உருகினார். ''பொது வாழ்க்கைன்னு இறங் கிட்டா அப்பிடித்தான். என்ன பண்றது. ஊர்க்காரங்க இங்கே வந்து உன்னை வச்சி வேலையை முடிச்சுக்கின்னு திரும்பி வந்து,

''என்ன செய்யணும்?''

''என் மகன் கதிர் எம்.பி.பி.எஸ். அட் மிஷன் எழுதியிருக்கான். எப்படியும் டாக்ட ராயிடணும்னு துடிக்கிறான். அவனை எப்படியாவது மானேஜ்மெண்ட் கோட்டா விலே உனக்குப் பழக்கமான அந்தக் காலேஜ்லே சேர்த்திடணும்.''

''என்னண்ணே புரியாம பேசறீங்க. அந்தப் படிப்பெல்லாம் நமக்குக் கட்டுப்படி ஆகுமா? அஞ்சுக்குக் கம்பி பக்கத்திலே நெருங்கவே முடியாது. டென்டலே ரெண் டுக்கு ஏறிடுச்சு. அதுவும் யாராவது ஆள் வைச்சுத்தான் செய்யணும்.''

''இப்பிடிச் சொன்னா எப்படிப்பா. அவங்க நம்ம கட்சிக்காரங்கதானே. நீ சொன்னா கட்டாயம் நடக்கும். போன வருசம் நம்ம பள்ளப்பட்டியான் மகனை அப்படித்தானே சேர்த்தே. அவனைவிட நம்ப பையன் என்பது மார்க் ஜாஸ்தி.''

''அம்மா போன வருஷம் கதைவேற, இந்த வருஷம் கதை வேற. சீட் விலை யெல்லாம் எக்கச் சக்கமா ஏறிப்போச்சு. மானேஜ்மெண்ட் கோட்டான்னா ரொம்பக் கஷ்டம். ஒவ்வொருத்தருக்கும் ஆயிரத் தெட்டு இடத்திலேர்ந்து பிரஷர் வரும்.''

''என் மகனை மெடிகல்லே சேர்த்துட் டுத்தான் திரும்பி வருவேன்னு ஊர்லே சொல்லிட்டு வந்துட்டேன். வெறுங்கை யோட திரும்பிப் போனா, நம்ம எல்லாருக் குமே அவமானம். ஊராருக்கெல்லாம் பண்ணியிருக்கே...''

அம்மாவும் அண்ணனும் காலில் விழாத குறை.

# கருணை பார்க்க...

எவ்வளவு பெருமையாப் பேசறாங்க தெரி யுமா!''. அம்மா தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டபோது, அந்தக் கிரிசல் கண்ணில் பட்டது.

''கண்மணி. அம்மாவை கடைக்கு அழைச்சிட்டுப் போய், நல்லதா ரெண்டு புடைவையும் ஜாக்கெட்டும் வாங்கித் தந்துடு.''

மகன் காட்டிய பரிவில் தாய் மனம் பூரித் தது.

அண்ணனே ஆரம்பித்தார். ''தம்பீ. உன் னைத்தான் நம்பி வந்திருக்கோம். வந்த காரி யத்தை நீதான் முடிக்கக் கொடுக்கணும்.''

பண்புச் செல்வன் யோசித்தார்.

'சரி. நீங்கள்ளாம் சாப்பிட்டு ரெஸ்ட் எடுத்துக்கங்க. நான் ஒருத்தரைப் பார்த் துட்டு வந்திடறேன்.''

ஒரு மணி நேரம் கழித்து போன்.

''யாரு அண்ணனா பேசறது? நான் தான், பண்பு பேசறேன். இங்கே நமக்கு வேண்டப்பட்ட ஆள் இருக்காரு. முடிக்க றேன்கறாரு. ஆனா ரெண்டு ரூபாய்

ரா.குருராஜன்

வேணுமாம். உங்களாலே முடியுமா? கையிலே எவ்வளவு வெச்சிருக்கீங்க...?''

அண்ணனுக்கு அடிவயிறு கலங்கியது. ''எங்கிட்டே ஏதுப்பா அவ்வளவு பணம்? கஷ்டப்பட்டு சுதாரிக்க ஒரு ரூபாய் கொண்டாந்திருக்கேன். நமக்குன்னு கொஞ்சம் குறைச்சிக்கச் சொல்லேன்.''

''இல்லேண்ணே. அந்த சரசுவதி தேவியே வந்து சீட்கேட்டாக்கூட ரெண்டுக்குக் குறைய மாட்டாங்க. உங்களாலே எவ்வளவு முடியும் சொல்லுங்க. இப்பவே லேட்டு. இன்னும் ரெண்டு நாள்லே அட்மிஷனை முடிச்சுடறாங்களாம்.''

அண்ணனும் அம்மாவும் யோசித்தார்கள்.



''உங்க அண்ணியோட செயினும் வளையலும் கொண்டாந்திருக்கேன். அதை வச்சி ஏதாவது பண்ண முடியுமா? ரெண்டும் பத்து பவுன் தேறும்.''

''பத்துப் பவுனா? முக்கிமுக்கி வித்தாக்கூட முப்பது தேறும். ரெடிகேஷ் குடுத்து வாங்க யார் இருக்காங்க? யாரைன்னு தேடறது? சரி வீட்டுக்கு வர்றேன். பேசலாம்.''

பண்புச் செல்வன் வீட்டுக்கு வந்தபோது, ஆளுக்கு ஆள் யோசனை சொன்னார்கள்.

''அடகு வச்சா இருபது அல்லது இருபத்தைஞ்சு வரும். மீதிக்கு?''

அம்மா எழுந்தாள்.

''என்கிட்டே ரெட்டை வட சங்கிலி இருக்குப்பா. கைவளையல் இருக்குது. பத்துப் பவுன்தேறும்.''

அடகு வைப்பதாக முடிவு செய்தார்கள்.

அண்ணி, அம்மா ஆகியோரின் நகைகளை அடகு வைக்க பண்புச் செல்வனுக்குக் கொஞ்சம் வருத்தமாக இருந்தது.

''இதெல்லாம் ஒரே இடத்திலே வைக்க முடியாது. எனக்குத் தெரிஞ்ச பண்டாபீஸ் ரெண்டு இருக்கு. நான் சொன்னா பணம் குடுப்பாங்க. நாளைக்குக் காலையிலே எப்படியும் பணம் புரட்டிடணும்.''

நாற்பதாயிரம் தேறியது.

''கவலைப்படாதீங்க அண்ணே. இதை வச்சே காரியத்தை முடிக்கப் பார்க்கறேன். மொத்த பணத்தையும் குடுங்க. நீங்க ரெஸ்ட் எடுத்துக்கங்க. நான் போயிட்டு வர்றேன்.''

## நினைவுபடுத்துகிறோம்!

அமரர் கல்கி
நினைவுச் சிறுகதைப்
போட்டிக்கான கதைகள்
வந்துசேர வேண்டிய
கடைசித் தேதி : ஜூன் 15.
மேலும் விவரங்களுக்குச்
சென்ற வார இதழ்
அல்லது அடுத்த வார
இதழைப் பாருங்கள்!

– ஆசிரியர்

பண்புச் செல்வன் அரை மணி நேரத்தில் திரும்பி வந்தார். முகத்தில் காரியம் முடித்தக் களை.

''அண்ணே, நீங்க ரொம்பவும் கொடுத்து வெச்சவங்க. அந்த ஆளோட சண்டை போட்டு ஒண்ணு நாப்பதுக்கே முடிச்சுட்டேன். இந்தாங்க அப்ளிக்கேஷன் பாரம். இதைப் பூர்த்தி பண்ணி எல்லா சர்ட்டிபிகேட்டுகள், காலேஜ் பீஸ், ஹாஸ்டல் பீஸ் கூட அடுத்த புதன்கிழமை வாங்க. நல்ல நாள். பையனைச் சேர்த்திடுவோம்.''

''உனக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலே!'' கண்களில் நீர் வழிய, அண்ணனும் அம்மாவும் நிற்க, பண்பு அவர்கள் காலில் மனைவியுடன் விழுந்தார்.

''எல்லாம் உங்க ஆசிர்வாதம்தாம்மா.. ஏதோ நம்மால் ஆன உதவி. ஊருக்கு உபகாரம் பண்ணணும்னு என்னால் ஆன தொண்டை செஞ்சிக்கிட்டிருக்கேன்.''

''இப்படியே நல்லது செய்ஞ்சிட்டு வாடா மகனே. ஊருக்கு உழைக்கிற உன்னைப் பார்க்க என் பெத்த மனசு எப்படி சந்தோஷப்படுது தெரியுமா...?''

அம்மா புதுப் புடைவையில் மகனை வாழ்த்தினாள்.

பீரோ திறந்திருந்தது.

எதிரே பண்புச் செல்வன். கைக்கு அடங்காமல் நூறு ரூபாய்க் கட்டுக்கள்.

கண்மணி பக்கத்தில் வந்தாள்.

''என்னங்க எனக்கொரு சந்தேகம்.''

''என்னடி?''

''அந்தக் காலேஜ்லேதான் நம்ம கட்சிக் குன்னு ஒரு சீட் ப்ரீயா இருக்குதே. அது என்ன ஆச்சு? அதை நீங்க கேட்டு வாங்கல்லையா?''

''அந்த சீட்டைத் தாண்டி நம்ம தலைமை கிட்டே சொல்லிக் கேட்டு வாங்கினேன். தலைவர் கிட்டே என் அண்ணன் மகனுக்கு சீட் வேணும்னு கேட்டதும் உடனே போன் போட்டு அந்த சீட்டை ப்ரீயா வாங்கிக் குடுத்துட்டார்.''

''அப்ப இந்தப் பணம்.''

''உனக்குத் தாண்டி. வைரநெக்லஸ் கேட்டியே... எங்கம்மாவையும் அண்ணனையும் ஏமாற்றி இந்தப் பணத்தைக் கறந்துட்டேன்னு பார்க்கறியா? நான் அரசியல்வாதிடி. அரசியல்லே அண்ணன் தம்பி, அம்மா அண்ணன் பாசமே பார்க்கக் கூடாது. இந்தப் பாசத்தையெல்லாம் அரசியலுக்குள்ளே விட்டா பாசமும் பிழைக்காது. அரசியலும் உருப்படாது.

''நேத்து ஊர்லேருந்து வந்த அம்மாவுக்கும் அண்ணனுக்கும் விருந்து வெச்சேன். அது பாசம். என்கடமை. எங்க அண்ணன் தன் மகனுக்கு எம்.பி.பி.எஸ். சீட் வேணும்னு கேட்டானே அது பிசினஸ். தொழில். அவனுக்கு உதவினது என் பாசம் இல்லே. என் கட்சித் தொடர்பு. அதுக்கு விலை குடுத்தே ஆகணும்...'' என்றார் பண்புச் செல்வன்.

## சுற்றுலாப் போட்டி - முடிவு

சரியான விடைகள் :

1. காந்தி மண்டபம்; 2. கல்கத்தா பேலூர் மடம்; 3. கங்கை கொண்ட சோழபுரம்; 4. குதுப்மினார்; 5. ஜந்தர் மந்தர்; 6. பாரதி நினைவு இல்லம்.

ஆறு சரியான விடைகளையும் எழுதிய எஸ். ரஷிதாபேகம், எஸ். எம். ரஹமத் உசேன் ஆகியோருக்குப் பரிசுத் தொகை ரூ. 250/- பகிர்ந்தளிக்கப்படுகிறது. விலாசம் : 2, வெங்கடேசன் தெரு, சென்னை - 7.

# உடைக்கப்பட்டது
# உதவும் கரங்கள் அல்ல...
# அதைச் சார்ந்த
# 490 உள்ளங்கள் தான்.

**தினமணி**

## "உதவும் கரங்கள்" வித்யாகர் தாக்கப்பட்டார்

சென்னை, ஏப்.6-

ஆதரவற்ற பெண்கள், குழந்தைகள், அனாதைகளின் நலன்களுக்காக பாடுபட்டு வருபவரும் 'உதவும் கரங்கள்' சமூக சேவை நிறுவனத்தின் இயக்குநருமான வித்யாகர் அமைந்தகரையில் செவ்வாய் அன்று தாக்கப்பட்டார். இதனால் அவரது கையில் எலும்பு முறிவு ஏற்பட்டது.

உதவும் கரங்கள் அமைப்பின் அபய இல்லமான 'தாயகம்' அமைந்தகரையில் உள்ளது. இதன் பக்கத்து வீட்டில் இருப்பவர்கள் தாக்கியதாக வித்யாகர் புகார் செய்துள்ளார்.

அந்த இல்லத்துக்கு தற்போது போலீஸ் ...

"என் கை உடைந்ததில் எனக்கு வருத்தமில்லை... ஆனால் முன் போல் வீடு வீடாகப் போய் உதவி கேட்க முடியல. ஒரு அழற குழந்தையைக் கூடத் தூக்க முடியாம செயலிழந்து நிற்கிறேன்"

எஸ் வித்யாகர்

வித்யாகரையே நம்பி வாழும் 490 அனாதைக் குழந்தைகள், அபலைப் பெண்கள், ஆதரவற்ற முதியோர், மனநிலை பாதிக்கப் பட்டோர் மற்றும் எய்ட்ஸ் நோயாளிகள் இத்தாக்குதலின் எதிரொலியால் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளார். இவர்களின் எதிர்காலம் — ஏன் — அடுத்த வேள்ள உணவே ஒரு பெரிய கேள்விக்குறியாக மாறி அச்சுறுத்துகிறது!! இந்த இக்கட்டான வேளையில் இவர்களுக்குத்தேவை உங்கள் மனம் நிறைந்த அன்பு, இதயங்கனிந்த கருணை, கைகள் கொள்ளா உதவிகள் — உங்களால் முடிந்த தானியங்கள், பழைய புத்தகங்கள் பாத்திரங்கள், மருந்து வகைகள், துணிமணிகள் இவைகளை அள்ளித்தாருங்கள்.




**உதவும் கரங்கள்**

460, என்.எஸ்.கே நகர்
(அண்ணா வளைவு அருகில்) சென்னை-600 106.

உங்கள் செக்/எம் ஓ/டி.டி யை மேல்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.
உதவித் தொகைக்கு வருமான வரி விலக்கு உண்டு

CHHAYA

பரிசு ரூ.250/-

# நீங்கள் ஒரு ஸ்பீல்பெர்க்!

ஜுராஸிக் பார்க் பார்த்திருந்தாலும் பார்க்காவிட்டாலும் அதில் வரும் டிரனோஸரஸ் ரெக்ஸ் என்ற டைனஸாரின் படத்தைப் பத்திரிகைகளில் பார்த்திருப்பீர்கள் - கம்ப்யூட்டர் உதவியுடன் வடிவமைக்கப்பட்ட உருவம். எங்கே, உங்கள் கம்ப்யூட்டர் மூளையைக் கொஞ்சம் கசக்கி, கற்பனைக் குதிரையைக் கொஞ்சம் தட்டி விடுங்கள் பார்க்கலாம்... கீழே தரப்பட்டுள்ள ஒற்றை வளைந்த கோட்டை வைத்துக் கொண்டு கட்டத்துக்குள் அடங்கும் ஒரு டைனசாரை நீங்கள் வரைய வேண்டும். கலைத் திறனைவிட கற்பனைக்கே முக்கியத்துவம் தரப்படும் இப்போட்டியில், ஒருவருக்கு மட்டுமே பரிசு ரூ. 250! ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. கூப்பனுடன் உங்கள் படம் வந்து சேரக் கடைசித் தேதி : 11.5.94. உறை மீது, "நான் வரைந்த டைனசார்" என்று குறிப்பிடவும்.



என் பெயர் : ....................................................................................

விலாசம் : ....................................................................................

....................................................................................

---

நொறுக்கு ஸ்பெஷல் :

# பிறந்தநாள் கொண்டாடியதற்கு மன்னிப்புக் கேட்ட அமைச்சர்!

●● தமிழகத்தில் பிறந்தநாள் விழா கொண்டாடாத அரசியல்வாதிகள் பைத்தியக்காரர்கள். மேற்கு வங்கத்திலோ அது தனி மனித வழிபாடு என்பதால் ஒரு குற்றமாகவே கருதுகிறார்கள். அண்மையில் விளையாட்டு மற்றும் இளைஞர் நலத்துறை அமைச்சரான சுபாஷ் சக்கரவர்த்தியின் பிறந்தநாளை ஒரு பொதுநல அமைப்பு கொண்டாட, இ. கம்யூனிஸ்ட் கட்சியின் கோபத்தைக் கிளறிவிட்டுவிட்டது! வேறு வழியின்றி அந்த அமைச்சர், தமது பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டதற்காகக் கட்சித் தலைமையிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்!

●● அண்மையில் நடந்த மாத்யமிக் தேர்வுகளில் கணக்குப் பரீட்சைத் தாளில் பாடத் திட்டத்திற்கு அப்பாற்பட்ட சில கேள்விகளைப் பார்த்த மாணவர்கள் அதிர்ச்சியுற்று, பரீட்சை ஹாலிலேயே அழத் தொடங்கிவிட்டனர். இது மக்களிடையே பெரும் பரபரப்பை ஏற்படுத்தவே, மறு தேர்வுக்கு ஏற்பாடு செய்தது மே. வ. அரசு. இது போதாதா மம்தா பானர்ஜிக்கு? உடனே கல்வி வாரியத் தலைவர், கல்வி அமைச்சர், முதல்வர் ஆகிய எல்லோருமே ராஜிநாமா செய்ய வேண்டும் என்று போராட்டத்தில் குதித்துவிட்டார்!

●● 'என் முதல் காதலும் இறுதிக் காதலும் இந்தியாதான்' என்று நேதாஜி சொல்வார். ஆனால் அவருக்கு இன்னொரு காதலும் இருந்தது. அதற்குரியவர் எமிலியோ ஷெங்க்கெல். சுபாஷ் சந்திரபோஸ் எமிலியாவுக்கு எழுதிய உணர்ச்சி பொங்கும் கடிதங்கள் பற்றிய கட்டுரையொன்று அடுத்த ஞாயிறன்று வெளியாகும்!

- இப்படி வங்கத் தினசரியான 'ஆனந்த பஜார் பத்திரிகா'வில் ஓர் அறிவிப்பு வெளியாக, நேதாஜி பக்தர்கள் கொதித்துப் போனார்கள். அடுத்த ஞாயிறன்று வெளியான இதழ்களையெல்லாம் பேப்பர் பையன்களிடமிருந்து பிடுங்கி எரித்தார்கள். இத்தனைக்கும் நேதாஜி எழுதிய அந்த ஆங்கிலக் கடிதங்களின் தொகுப்பு ஏற்கெனவே புத்தகமாக வெளிவந்ததுதான்! அவற்றின் அடிப்படையில் பத்திரிகைக் கட்டுரை எழுதியவர்: நேதாஜியின் அண்ணன் மருமகள்!

●● கேரள மாநிலத்திலுள்ள கூத்துப்பரம்பில் ஒரு கலவரம் ஏற்பட்டபோது நிறைய போலீஸ்காரர்கள் வரவேண்டியதாயிற்று. வந்தவர்கள், காலைக் கடன்களைக் கழிக்க இடவசதியின்றித் தவித்துப் போனார்கள். ஒரு வீட்டின் பின்புறம் காணப்பட்ட தோட்டத்துக்குள் சில போலீஸார் மதிலேறிக் குதித்துவிட்டார்கள். அது ஒரு நீதிபதியின் வீடு! போலீஸாரைக் கண்ட நீதிபதியின் மனைவி அங்கு வர, விஷயமறிந்த போலீஸார் அலறியடித்துக் கொண்டு மீண்டும் வந்தவழியே சுவரேறிக் குதிக்க, விஷயம் புகார் செய்யப்பட்டது. விசாரணையில் ஒரு பலனும் கிட்டாமல் போக, நீதிபதியின் மனைவி, தம்மால் அந்தப் போலீஸ்காரர்களை அடையாளம் காட்ட முடியும்

● இன்னொரு காதல்....



என்று கூற, மீண்டும் சம்பந்தப்பட்ட அந்த நாவில் அவ்வூரில் டூட்டி பார்த்த அத்தனை போலீஸாரையும் அணிவகுத்து நிறுத்த ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது!

இது ஒருபுறமிருக்க, கொச்சி அருகி லுள்ள கோதாடு என்னும் கிராமத்தி லுள்ள 734 வீடுகளிலும் கழிப்பறை வசதி ஏற்படுத்தப்பட்டு, இந்தியாவிலேயே நூறு சதம் கழிப்பிட வசதியுள்ள முதல் கிராமம் என்கிற சாதனையையும் கேரள அரசு ஏற்படுத்தியுள்ளது!

●● முன்பு கேரளாவை ஆண்ட மாவேலி மன்னன் ஆட்சியில் நீதி, நேர்மை, சத்தியம் என்பது உயிர்மூச்சாக இருந்தது. அந்த மன்னன் பெயரில் திரு வனந்தபுரத்தில் அரசு ஏற்படுத்திய ஸ்டோர்களில் விற்கப்படும் பொருட் களில் தரமும் இல்லை; சரியான எடையு மில்லை. இதற்காக வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது!

●● மாதத்துக்கு ஒரு செவ்வாய்க் கிழமை கர்நாடகாவெங்கும் தொலைக் காட்சியில் தமிழ் 'ஒலியும் ஒளியும்' (அரைமணி நேரம்) இடம்பெறுவது நெடு நாளாய் இருந்துவரும் வழக்கம். இது தவிர வேறு தமிழ் நிகழ்ச்சி, இந்த ஊர் தூர் தர்ஷனில் கிடையாது. இதுவும் பெங்க ளூர் தூர்தர்ஷன் அதிகாரிகளுக்குப் பிடிக்க வில்லை போலிருக்கிறது. ஆனால் நிறுத்திவிட முடியாத - நிர்வாகச் சிக்கல் கள் வேறு. என்ன செய்தார்கள் தெரியுமா? தமிழ் ரசிகர்களை, இந்த 'ஒலியும் ஒளி யும்' மூலமாகவே கதற அடிக்க முடிவு செய்து, ஒரே கேஸட்டை மாதாமாதம் போட்டுக் கடுப்படிக்கிறார்கள்! ஒவ் வொரு மாதமும் 'இம்முறை ஏதாவது புதிய பாடல் போடுவார்கள்' என்கிற நப்பாசையுடன் டீவி முன் அமர்ந்தால் வழக்கம் போல் பழைய பல்லவிதான்.

பகுதிவாழ் தமிழ் மக்களிடம் இது குறித்துப் பேசிப் பார்த்தால் கொலை வெறி வராத குறை. குமுறுகிறார்கள். பெங்களூரைச் சேர்ந்த தமிழ் அமைப்பு களோ இதர அமைப்பினரோ, அரசோ இதை ஒரு 'சீரியஸ் விஷயமாக' எடுத்துக் கொள்ளவில்லை. தமிழகத்தைச் சேர்ந்த தலைவர்கள், எம்.பிக்கள் யாராவது தகவல் ஒலிபரப்புத் துறையினரிடம் சொல்லி, 'அந்த ஒரு கேஸட்'டை மட்டும் மாற்ற உதவினால் நூறாயிரம் கோடி புண்ணியம்!

கல்கத்தாவிலிருந்து :
க. கிருஷ்ணமூர்த்தி
திருவனந்தபுரத்திலிருந்து :
எஸ். எஸ். மணி
பெங்களூரிலிருந்து :
பொர்னாண்டஸ்

## காளான் வளர்த்தால் காசு பார்க்கலாம்!





நல்ல சம்பளம் கிடைத்துக் கொண் டிருந்த வேலையை விட்டுவிட்டார் சகாய நாதன். காரணம், காளான் வளர்ப்பில் அதைவிட அதிகமாகச் சம்பாதிக்கலாம் என்பது புரிந்து விட்டதால்தான்! மனைவி எஸ்தருக்கும் இதில் ஈடுபாடு ஏற்பட்டு விட்டது. பிறகென்ன, காளான் வளர்ப்பு களஜோராக நடக்கிறது. தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாத அளவில் கிராக்கி இருக்கிறது.

தென்னஞ்சோலை தழைக்கும் சேலம் கருமாபுரம் கிராமத்தில் நடக்கிறது இந்தக் காளான் புரட்சி. யாருக்காவது இந்தச் கைவேலை வாய்ப்பு பற்றித் தெரிந்து கொள்ள வேணுமானால் நேரில் போகலாம். காளான் வளர்ப்பு பற்றிச் சொல்லித் தரத் தம்பதி தயார். "சகாய நாதன் என்று பெயர் வைத்துக் கொண்டு இதைக்கூடச் செய்யாவிட்டால் எப்படி?" என்று கேட்கிறார் இந்தக் காளான் பண்ணை உரிமையாளர்.

- எஸ். வி. என்.
படம் : பாலாஜி

# சாட்டையடித் தலையங்கம்!

◆ வாழைப்பழத்தில் ஊசியை ஏற்றுவது என்பார்களே, அது போலிருந்தது தங் கலின் தலையங்கம்.
அலிவலம், எஸ். வடிவேலு.

◆ தலையங்கம் சாட்டையடி!
கர்சனம், ஆர். திருமலை.

◆ எங்கள் வீட்டில் நான்கு நாட்கள் முன்பு, தொடர்ந்து இரண்டு நாட்கள் பூனை நுழைந்து சமையற்கட்டிலுள்ள பாலைக் கொட்டியது! பத்து நாட்கள் முன்பு மொட்டை மாடியிலுள்ள ஆன்டனா திருட் டுப் போயிற்று. ஒரு வாரம் முன்பு தென்னை மரத்தில் குலையாய் முற்றிய தேங்காய்கள் கொள்ளை போயிற்று. இதற்கெல்லாம் கார ணம் யார் தெரியுமா? மத்திய அரசுதான்!! மத்திய அரசின் ''சநி''த் திட்டம் வேலை செய்திருக்கிறது! அடுத்த வாரமும் கல்கி தலையங்கம் ஜோ(க்கா)ரா தடை போடட்டும்!
பழவந்தாங்கல், ரமணி சுதர்சனம்.



◆ பாலக்காடு சிறப்பிதழ் கண்டேன். எத்தனை விஷயங்கள்.... அம்மம்மா! கேரளத்து 'சத்தியா' சுவைத்தது மாதிரி ஓர் இன்பம் ஏற்பட்டு விட்டது. (மலை யாளத்தில் 'சத்தியா' என்றால் டின்னர்).
சென்னை - 39, சாந்தி சுவாமிநாதன்.

◆ அட்டைப்பட அழகும் சரி, அது தொடர்பான கட்டுரையும் சரி, என் மனத்தை விட்டு அவ்வளவு சீக்கிரம் நீங் காது. பக்திக்கொரு புதிய பரிமாணம் இது.
மொரட்டுப்பாளையம்,
க.நா. இராஜேஸ்வரன்.

◆ மிருதங்கம் செய்யும் வேலாயுதன் பேட்டி ஆழ்மன சலனங்களை விளைவிப்ப தாக இருந்தது. தனக்குப் பின் வாரிசு என்பது போய், தனக்குப் பின்னும் தன் பெயர் உச் சரிக்கப்படுவதை விசுவாசிக்கிற வேலாயு தவின் ஆதங்கம் கூட சங்கீதமாய் மிளிர் கிறது.
திருச்சி, தாயு. செந்தில் குமார்.

◆ கையில் விசிறியுடன் இருக்கும் பாலக் காடு கலெக்டர் வித்தியாசமானவர்தான்!
சென்னை - 33, தி.ச. தாண்டவர் ராயன்.

◆ 'கிட்டா' சிறுகதை படித்தேன். பி.வி.ஆர். வழக்கம் போல் ஒரு சமுதாயப் பிரச்னையைக் கையாண்டிருக்கிறார். தன் தந்தைக்குத் தெளிவை ஏற்படுத்திய ராதா நல்ல பாத்திரம். பெரிய அளவில் மண மகனைத் தேடி ஒரு பெண்ணின் உள்ளத்து உணர்வுகளைப் புரிந்து கொள்ளாமலிருக் கும் பெண்ணைப் பெற்றவர்களுக்கு கிட்டா சிறுகதை ஒரு நல்ல பாடம்.
திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

◆ 'முகம்' சிறுகதை அருமை. அகத்தின் அழகை விவரித்த விதம் அற்புதம்.
கோயமுத்தூர், ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

◆ வரவு எட்டணா, செலவு பத்தணா! பட விமர்சனம் கனகச்சிதம்.
தூத்துக்குடி - 2, எஸ். ராமசுப்பிரமணியன்.

◆ ''லீவ்ல விசேஷங்க''வைத் தகுந்த நேரத்தில் வெளியிட்டு, எங்களின் கோடை வெப்பத்தையும் மறந்து குளிர வைத்து விட்டீர்கள்.
கோயமுத்தூர், பாக்யலட்சுமி சுகவனம்.

◆ கல்கி, 9.1.94 இதழ் தராசு பதில்கள் பகுதியில், எனது கணவர் ஒய்.டி. தாத்தாச் சாரி, புற்று நோயினால் இறந்ததாக எழுதப் பட்டுள்ளது. அவர் புற்று நோயிலிருந்து பகவான் அருளால் பூரண குணம் அடைந் தார். ஆனால் அதற்குத் தரப்பட்ட சிகிச்சை களின் பக்க விளைவுகளால்தான் சில காலம் சென்று காலமானார்.

போர்ட்ஸ் மவுத்,
யூ.எஸ்.ஏ., மாதுரி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன், ஆசிரியர் : சீதா ரவி, நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# பரபரப்பான தமிழ்நாட்டில் சுறுசுறுப்பான அறிமுகம்!




### மிஸ்டர் பட்லர்ஸ் சோடாமேக்கர்

இந்தியாவின் முதலாவது சோடாமேக்கர் இப்போது தமிழ்நாட்டிலும் அறிமுகமாகிறது. இது ஒரு உபயோகிக்க எளிதான கையடக்கமான வீட்டுபயோகச் சாதனம்.

சுத்தமான தண்ணீரிலிருந்து குமிழ்கள் வெடித்துச் செய்யும் உயர்ரகச் சோடா இப்பொழுது நொடியில் தயார்–உங்கள் வீட்டிலேயே! மிஸ்டர் பட்லர் வழங்கும் குளிர்பானக் கான்சன்ட்ரேட்டுடன் இந்தச் சோடாவைக் கலந்தால் உங்களுக்கு கிடைப்பது உங்கள் மனதைக் குளிர்விக்கும் சுவையான பானம்!

100 சோடாக்கள் வரை தயாரிக்கக்கூடிய சிலிண்டரின் விலை ரூ. 30/- மட்டுமே. வெறும் 30 பைசா செலவில் ஒரு சோடாவும் ஒரே ஒரு ரூபாய் செலவில் சுவையான குளிர்பானமும் உங்கள் வீட்டிலேயே கிடைப்பதை நினைத்தால் பரபரப்பும் சுறுசுறுப்பும் உங்களையும் தொற்றிக் கொள்கிறது இல்லையா?!

மிகவும் பாதுகாப்பானது. மிகமிகச் சிக்கனமானது

---

**Distributor for TAMILNADU : MADRAS : NKT Suma Marketing Ph: 841618; MADURAI : Sabari Agencies, Kovilpatti Ph: 3151; KANYAKUMARI : Sales India Enterprises, Nagercoil Ph: 5279; SALEM : Metro Vision Ph: 64392; TRICHY : Bell & Co. Ph: 28909**

*Available at all major dealer outlets in MADRAS, MADURAI, KANYAKUMARI, SIVAKASI & DINDUGAL.*

**Mr. BUTLER'S**
**SODAMAKER**

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka